மாசிமலர் க.

சுத்தானந்த பாரதியார் இயற்றிய

# வாகீச விஜயம்

அல்லது

## அப்பரின் அன்பு வெற்றி.

( இன்னிசைச் செந்தமிழ் நாடகம். )



அச்சமிலே! அச்சமிலே! அன்போ டருளிறையை
நிச்சலும் போற்றி நினே!





பதிப்பாளர்,
மாசி,
தபாற்பெட்டி 14, கோலாலம்பூர்
1935

 [ விலை 50 காசு.

உளந்தனை அள்ளும்

## இளந்தமிழ்த் தளிர்கள்.

(விலை 10 காசு.)



(7) நாடகக்கலை விளக்கம் (அச்சில்)

## சமய வாழ்த்து.

எல்லாரும் வாருங்கள்! எல்லாரும் சேருங்கள்!
இன்பவிண் ணுள்ள திங்கே!
எல்லாரும் பாடுங்கள்! எல்லாரும் ஆடுங்கள்
எல்லார்க்கும் ஓர்சமயம்!
பல்மதச் சண்டைகள் பாழ்த்தன; தூய
பரமனை வாழ்த்திடுவோம்!
எல்லா வுயிர்களும் ஈச னருளுடல்
எல்லாரும் ஓர்குலமே!

எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கு நிறைந்தவன்
இல்ல மியற்கை யுடல்!
ஒள்ளிய வுண்மை யறிவின்பத் தெய்வம்
உயிர்க்குயி ரென் றுணர்வோம்!
உள்ளத்தை யள்ளிடுந் தெள்ளமு தத்தமிழ்
ஓது மறையொலிப்போம்!
அள்ளிப் பருகுவோம்—அன்பருள் வெள்ளத்தை
ஆனந்தத் தோழர்களே!

பல்வகைப் பாருக்குப் பார்வை யளிக்கும்
பகலன்ன தெங்கள்மதம்;
பரம னருளிற் பழுத்தவர் பாடிப்
பரப்பிய தெங்கள் மதம்!
இல்லையென் பார்க்கும் இருக்கு முவமதி
யிலக்குவ தெங்கள் மதம்;
இல்லறத் திற்செய்ய நல்லறமேன்மை
இணைத்த தமிழ்ச் சமயம்.

தில்லைப் பொதுவினிற் சித்தர்கள் முத்தர்
சிவானந்தச் செல்வர்கணம்
திருவுறு தெய்வச் செயல்கள் பல்லாயிரஞ்
செய்வித்த தெங்கள் மதம்
எல்லையில் லாத் துரி யாதீதப் பால்வெளி
யெட்டிய தெங்கள் மதம்
எல்லாரும் இன்புற் றிருக்க வழைக்கும்
இயல்மதம் வாழியவே!



அ.ள.ப. அரு. சுப்பிரமணியன்.
திருவாரூர்.
வைகு. மார். உஎ.

# முன்னுரை.

தமிழர் சமயம் சைவம் சைவம் பொதுநெறி. அதில் எல்லாச்சமயங்களும் பொருந்தும். எல்லாச்சமயங்களுக்கும் அது பொருந்தும் என்பது அறிஞர் முடிபு. சிவம் என்பது இன்பம். இன்பம் வேண்டார் யார்? இம்மை மறுமையின் வழி காட்டுவதே சிவநெறி. ஆழ்ந்து பார்க்கின் எல்லாச் சமயங்களும குறிக்கும் இன்ப நெறி சிவத்தில் முடியும். தமிழர் தங்கள் அருமைச் சமயத்தை நன்கு அறிந்து தெளிந்து நின்று பயனபெறும் பொருட்டே இந் நாடகம் எழுதப்பெற்றது. மற்றோர் எண்ணம்: தனித் தமிழ் நாடகங்களைத் தமிழர் நடித்துத் தனித்தமிழ்க் கலையை வளர்க்கவேண்டுமென்பது. வங்காளத்தில் கிரீஷ் சந்திரகோஷும், தாகூரும், நாடகக் கலைவளர்ச்சிக்குச் செய்துள்ள அரிய வேலையைத் தமிழரும் செய்யலாம். பதினாயிரம் ஆண்டுகளுக்கு மேல் நாகரீகச் செல்வியாகவும் இசை மடந்தையின் இளவரசியாயும் விளங்கும் நமது தமிழ் உறங்கலாமா? வீரத் தமிழர் வீறுற்றெழுக!

நாடகமேடையைப் புனிதமாக்கவேண்டும். நாடக மேடையை சமயசமூக ஆசார சீர்திருத்த மன்றமாகச்செய்தல் இன்றியமையாதது. சிவனும் நடராஜன்; விஷ்ணுவும் அரங்கநாதன். உலகமே அவர்களுடைய ஆனந்த நடன சபை. இந்த உயர்ந்த எண்ணத்துடன் நல்லொழுக்கமும் சிறந்த கல்வியும், அருட்பணியும், இசைத்திறனும், கலை நயமும், நடன சக்தியுமுள்ள இருபது தமிழ் வாலிபர்கள் முன்வருவார்களானால் தமிழ் நாட்டில் மிகவும் அரிய சீர்திருத்தங்கள் இயற்றலாம். மற்ற எந்த சாதனத்தினும் நாடகத்தின் வாயிலாக மிக எளிதாகச் சீர்திருத்தங்களைச் செய்யலாம்.

தமிழ் உறங்கற்க! தமிழ் தென் மொழிகளின் தாய்; தமிழ் விழித்தெழுக! தமிழ் தனிக் கலேயாக வளர்க! நாடகம் என்பது இயல், இசை, ஓவியம், அழகு, இன்பம், அன்பு, காதல், கற்பு, உலகம் உள்ள விதம், அது இருந்த வேண்டிய விதம், வாழ்வின் போக்கு, வாழ்வின் கருத்து, வாழ்வு புனிதமுறும் வழி, சமயநெறி, சமதர்மம், கடவுளன்பு, ஆருயிரன்பு முதலிய பல பல விஷயங்களைக் கண்முன்னே நடத்திக்காட்டிக் கருத்திற் பதிய வைப்பது. தமிழர் சமயத்தையும் பல மதங்களுக்குள்ள ஒற்றுமையையும் விளக்கிப் புனிதமான சீர்திருத்தக்கருவியாக உதவுவதற்குத் தனித் தமிழ் நாடகம் எழுத 1924ம் ஆண்டு முயன்று அப்பர், மாணிக்கவாசகர், நந்தனர், காரைக்கா லம்மையார், கண்ணப்பர், ஆண்டாள், திருமங்கையாழ்வார் ராணி மீனுக்ஷி முதலிய நாடகங்கள் தயாரிக்கப்பட்டன. அவற்றுள் வாகீச விஜயம் தமிழ்க்குருகுலத்தில் நடிக்கப்பெற்றது. சமரச சிவாத்துவிதத்தில் உண்மைப் பற்றுள்ள தமிழ்த் திருவாளர்க்கு இதை அர்ப்பணஞ் செய்கிறேன்.

தமிழ்க் கலே அமுதாகத் தலே சிறந் தோங்குக!

இதைப் பொதுநோக்குடன் பயில்க; எச்சமயத்தையும் குறைவாகக்கருதற்க; அததன் இடத்தில் அதது சிறப்பு. அருக சமயம் நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் ஆகிய மூவ்வழிபற்றியது. அதன் மாண்பும் மஹாவீர தீர்த்தங்கரர் பெருமையும் பாரதசக்தியிற் காண்க. மனிதனுக்கு மனிதன் அறியாமையாற் செய்யும் பிழைகளேயே முதல் பாகம் வர்ணிக்கிறது. பல்லவராஜனிடம் குற்றமில்லே; மனிதனின் மனவிகாரமே குற்ற முடைத்து. அதையே துன்மதி, குண்டன் முண்டனுக வர்ணிக்கப்படுகிறது; இவர்கள்

சமணரல்ல. ஆதலின் இந்நூல் படிப்போர் எள்ளளவும் பிற சமயங்களைக் குறை கூறற்க.

இந்நூலை வெளியிட மேற்கொண்ட "மாசி" பைந்தமிழ்ச் சோலையின் ஒரு அரிய ஊழியர்; பையிளைத்தும் கையிளைத்திலர்; பண மிளைத்தும் மன மிளைத்திலர். "மாணிக்கவாசகர் திருப்பணிபுரிந்தார்; நான் என் அப்பருக்காகத் தமிழ்ப்பணி புரியலாகாது" என்னும் ஆர்வத்துடன் இந்நூலை வெளியிடுகிறார். அன்பர் அருமை பெருமையை வியந்து, இந்நூல் தொடர்ச்சிக்கு "மாசிமலர்" முடிசூட்டுவாம்.

இளந்தமிழ் வீரர் உளந்துணிந்தெழுக!

சுத்தானந்தபாரதி.



# வாகீச விஜயம்

அல்லது

# அப்பரின் அன்பு வெற்றி.

## பாகம். க

### நாடக பாத்திரர்கள்.

1. சிவபாதம் - சிவநேசன் - அடியார், 2. திலகவதி, 3. வாகீசர், 4. கோயில் அர்ச்சகர், 5. பல்லவ ராஜன், 6. ஸன்மதி, 7. துன்மதி, 8. சதிசேனன் 9. அதிகாயன், 10. குண்டன், 11. முண்டன், 12. தத்வசாகரர், 13. அடியார்கூட்டம்.

### க. மலர்ச்சி.

(இடம்: திலகவதியார் திருமடத்தின்மூன்.)

(சிவநேசன் வருதல்.)

பண்ணின் இசையாகி நின்ருய் போற்றி!
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி!
எண்ணும் எழுத்துஞ்சோல் லாஞய் போற்றி!
யென்சிந்தை நீங்கா இறைவா போற்றி!
விண் ணு நிலனுந்தீ யாஞய் போற்றி!
மேலவர்க்கு மேலாகி நின்ருய் போற்றி!
கண்ணின் மணியாகி நின்ருய் போற்றி!
கயிலை மலையானே போற்றி போற்றி!

எங்கே சிவம் உளதோ அங்கே திரு வுளது! நமச்சிவாய வாழ்க! நாதன்ருள் வாழ்க!

(சிவபாதன் வருதல்)

நமச்சிவாய வாழ்க! நாதன்றாள் வாழ்க! அன்பரே எங்கு செல்கின்றீர்?

சிவநேசன்:—தெரியாதா .புதுமை! இன்று திருவதிகை வீரட்டானத்தில், கூற்றை உதைத்த கொற்றவன்திருமுன்னர், மருணீக்கியார் புறச் சமயம் நீத்து அரனடிக்காளாகப் போகின்றார்.

சிவபாதன்:—ஓகோ! அது மிக நற் செய்தி! மருணீக்கியார் யார்? எங்கே பிறந்தார்? எங்கே வளர்ந்தார்? எத்தகைச் சிறப்பினர்? அன்பர்க் கன்பன், அருட் பெருஞ்சோதி, இன்பக் கடலோன், எவர்க்கும் இறைவன் பரமனை மறந்து, புற மதம் புகுந்ததேன்? புகுந்தவர் மீண்டதேன்?

சிவநேசன்:—சிவனடியார் கேட்கட்டும். திருமுனைப்பாடிநாட்டில், திருவாமூரில், வேளாளர்குலத்தில், குறுக்கையர் குடியிற் பிறந்தவர் மருணீக்கியார். அவர் தந்தை புகழனார்; தாய் மாதினியார்; அவர் தமக்கை சிவ விரதத்திலகும் திலகவதியா ராவர். பெற்றோர்கள், மருணீக்கியாருக்கு உண்மைக் கல்வி புகட்டினர். மருணீக்கியார் அன்பிலும், அறிவிலும் கல்வி கேள்விப் புலமையிலும் வளர்பிறைபோலச் சிறந் திலகினார். திலகவதியாருக்கு வயதுவந்தது; மெய்யடியாரும் அரசன்; படைத் தலைவருமான கலிப்பகையாரென்னும் வீரருக்கு அவரைத் திருமணம் பேசிமுடித்தனர். மணவினை முடியுமுன் கலிப்பகையார் வடநாட் டரசருடன் நெடும்போர்புரிய அரசன் கட்டளை தாங்கிச் சென்றார்: இச்சமயம் மருணீக்கியாரின் தந்தை புகழனார் சிவ பதஞ் சேர்ந்தார். தாயும் உடன் சென்றார். ஆங்கு கலிப்

பகையாரும் போரில் வீர விண்ணேறினர்! என்னே மைந்தர் துன்பம்!

சிவபாதன்:—வாழ்வின்நாடகம் ஊழ்விளையாடலே. இருக்குமட்டும் இறைவனில் வாழ்ந்தார் இன்பமெய்தினர்; துன்பம் ஒழிந்தனர். ஒவ்வோர் உயிருளும் உயிர்ப்பாய் உயிர்க்கும் தெய்வஞ் சேர்ந்தார் உய்ந்தனர் உலகில்!

> என்னி லாரும் எனக்கினி யாரில்லை.
> என்னிலும் இனி யானொருவன் உளன்.
> என்னுளே உயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்(கு)
> என்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே!

சிவநேசன்:—நமச்சிவாய நமச்சிவாய! அதுவே உண்மை!

சிவபாதன்:—பின்னே வரலாற்றைத் தொடருக!

சிவநேசன்:—அடியார் கேட்கட்டும். இப்போது இச் செல்வப்புதல்வர்க்குச் சிவனே தந்தை; சக்தியே தாய். பெற்றோர் இறந்த துன்பப் புண்ணில் காதலன் இறந்த சுடுசுரம் பாய்ந்து திலகவதியார் தம் உயிரை மாய்க்கத் துணிந்தார்.

சிவபாதன்:—ஏன்? இதென்ன பேதமை?

சிவநேசன்:—கற்புள காதலின் அற்புத உணர்வது. உயிரில் ஒன்றிய உண்மைக் காதலர், ஒருவர் பிரிந்து ஒருவர் வாழார். உண்மைக் காதலின் உள்ளமும் ஒன்று, உயிரும் ஒன்று; உணர்வும் ஒன்று. மருணீக்கியார் அக் கற்பரசியைத் தடுத்து வணங்கித் 'தந்தை தாயிழந்து, தந்தையுந் தாயுமாய்த் தம்மையேகருதி வெம்மை தணிந்தேன். தாமும் இறப்பின் யாமும் இறப்போம்' என்றதும், திலகவதியார்

மனமிரங்கிச் சாகும் நினைப்பின்றித் தூய சிவவிரதையாய் திரு வீரட்டானம் அடைந்து சரியை கிரியை சிவரைப் போற்றி, சிவ சிந்தனையுடன் சிவப்பணி புரிந்து, சிவ புண்ணியத்திற் சிறப்புற வாழ்ந்தார்.

சிவபாதன்:—ஆம்; ஆடவர், பெண்டிர் யாவராயினும் அரனடி போற்றி அருந் தவம் புரிக! தகையே மங்கையர் தவப் பொலி வெய்தல். ஔவை போன்று மனத் தனி யின்றி, வாழ்வு முழுதும் விரதங் காத்தலும் அரிவையர்க் குரிமையே. மணமகன் இழந்தோர், மறுமணம் வேண்டார் விரதத் தூயராய் விளங்குதல் அறனே! திலகவதி பெண்களுக்கு ஒப்பற்ற தூய உதாரணங் காட்டினர்! அவர் தவம் வாழ்க! பெண்மை பெருமை பெறுக! பிறகு, மருணீக்கியார் செய்தி யென்ன?

சிவநேசன்:—கேட்கட்டும்; மருணீக்கியாருக்கு உலகின் நிலை மாற்றம் பளிச்சென விளங்கியது! பொன்னும் பொருளும் பொதியாய்க் குவித்தும், என்னலம் முடிவில்? ஈந்தார் வாழ்ந்தார்! அகந் துறந்தார் சகந்தனை வென்றார்; என் றெண்ணித் தனது செல்வம் அனைத்தையும் அறச் செயல் களுக்கே அள்ளிக் கொடுத்தார்! சோலை வளர்த்தார்; குளங் கள் தொட்டார்; வறுமை தீர வறியவர்க் கீந்தார்; விருந் தோம்பினர், புலவர்க்கீந்தார்; பல நலம்புரிந்தார்; முடிவில், விழுமிய வன்னி விரதம் பூண்டு, காமங் கடிந்து, சன்னெறி காத்து அரிவையர் தம்மை அன்னையா யெண்ணி, உடல் மனத் தூய்மை, உரையைச் சுருக்கல், தூய நல் லுணவு, துயிலினைக் குறைத்தல், இயற்கை வாழ்வு, இன்ப வுணர்வு, போக மறப்பு, யோக நினைப்பு, அறிவுப்பயிற்சி, ஆன்ம வளர்ச்சி, மாசறு ஒழுக்கம், தேசுறு வாழ்வுடன் ஆயுள் முழுதும் அருட்பணிபுரிய அனைத்தையும் துறந்தார்!

சிவபாதன்:—மருணீக்கியார் மனவுறுதி வாழ்க! தொல்லையாசையைத் துறப்பதெளிதோ? வைத்தபொருளை வழங்குதல் எளிதோ! மருணீக்கியார், மனத்தின் இருணீக்கியார், வாழ்க! பின்னை என்ன செய்தார்?

சிவநேசன்:— பாடலீபுரஞ் சென்றார்; அங்கு சமண நூல் பயின்றார்; சமணர் இவரைப் போற்றி வியந்து "தருமசேனர்" என்ற பட்டஞ் சூட்டித் தமது சமயத் தலைவராக்கி வணங்கினர்!

சிவபாதம்:—ஐயோ! சைவம் நீத்தேன் சமணம்புகுந்தார்?

சிவநேசன்:—தன் மதம் விட்டுப் பிறமதம் புகுதல் சால்பன்று. எம்மதத்திலும் செம்மையுள்ளது; உண்மையும், அன்பும், உயிர்களுக்கிரக்கமும், கொல்லாநெறியும் குடிகளவொழித்தலும், ஆசை அகந்தை, ஆணவம் களைதலும், சுத்த முத்த சித்தி யின்பமும் எல்லா நெறிக்கும் இயல்பேயாகும் ஆயினும், பிறந்த சமயம் பேணுதல் மாண்பு.

சிவபாதன்:—சமண சமயத்தை யான் குறை கூறவில்லை, அதில் அரிய அறநெறிகள் உள்ளன. ஆயினும் சைவப் பெருமையை அறியாது மருணீக்கியார் மருண்டனரே!

> ஆட்பாலவர்க் கருளும் வண்ணமும் ஆதிமாண்பும்
> கேட்பான்புகில் அளவில்லை கிளக்கவேண்டா;
> கோட்பாலனவும் வினையுங்குறுகாமை யெந்தை
> தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்கத் தக்கார்.

ஐம்பூதங்கள், உயிர், கதிர் மதியினைத் தன்னுடல் தாங்கி ஐந்தொழில் நடத்துவான்—தன்னிற் பிறிதிலான்; சக்தியால் அனைத்தையும் இச்சைப்படிக்கே யியக்கும் இறைவன். உண்மை யணிந்து, உடல் உளம் போகம்

உலகை நுகர்ந்து, சரியை கிரியை யோகமும் ஞானமும் போற்றி, அன்பும் அறிவும் பணியும், அருளும் வாய்மையும் தூய்மையும் வளம் பெற வளர்த்து, அமைதியும் இன்பமும் அழகும், எழிலும் அருட் பெருஞ்சோதியும் அமர வாழ்வும் அளிக்கும் சிவநெறியைத் தவநெறியைச் சுவை நெறியைச் சுவைத்தார் யாரே அதனை விடுப்பார்! முப்பொருளுண்மையின் வைப்பாகி, ஆணவந் தேய்ந்து தேய்ந்து இறைவனை ஈரறக் கலக்கும் இன்ப ஒற்றுமை அதிலுள்ளது. அந்தோ! இச் சிவச் செல்வத்தைத் தம்முள் வைத்துத் தமிழர் உறங்குவது வெட்கம் வெட்கம்! தாமும் உகக்காது உலகிற்கும் வழங்காது, கருமியின் கனகம் போன்று இச் சிவத் திருவைத் தமிழர் மறதி மயக்கிற் புதைத்ததினலன்றோ நம்மவர் பிற சமயம் புகுகின்றனர்; பிற சமயங்கள் நம் நாட்டை ஆளுகின்றன? தமிழர் சமயம் அமுதினும் இனியது. சாந்தமும், சுத்தமும், சக்தியும், இன்பமும் அளிக்கும் சிவநெறி யன்றோ அது? இனியேனும் தமிழர் சமய உணர்ச்சி பெறுக! இறைவனறிவே இன்பவாழ்வு!—மருணீக்கியார் பிறகு எப்படி மீண்டார்?

சிவநேசன்:— நமச்சிவாய வாழ்க! நாதன்றாள் வாழ்க! கேட்கட்டும்! தம்பியின் நிலைமையைத் தமக்கை அறிந்தார். திலகவதியார் சிவனிடம் நொந்தார்:—

‘அனைத்தையும் ஆளும் அரனே போற்றி!
அடியனை யாண்ட அரசே போற்றி!
அன்பர்க்கருளும் அருளே போற்றி!
துன்பந் துடைக்குந் துரையே போற்றி!

திருவுறும் உன்றன் சிவநெறி விடுத்து, மருண்டு, பிற மதம் பொருந்திய தம்பியை எண்ணி யெண்ணி யின்னல்

பெருகினேன். இன்னல் தீர்க்கும் இறைவ, நீயே துணை!' திரும்பவுந் தம்பியை அரும்பெருஞ் சிவநெறி சேர்த்து உய் விப்பாய் தேவதேவனே! கூற்றை உதைத்தாய்! குறை யைத்தீராய்' என்று நாளும் வணங்கவே சிவபெருமான் கனவில் தோன்றி,

'அன்பர் கவலை என்பெருங் கவலையாம்!
தளர்வு நீங்குக! தம்பியை மீட்குனன்;
முன்னர் மாதவம் முயன்றேன் பணிக்கே
இப்பிறப் பெய்தினன்! ஏற்குனன் அவனே!
சூலைநோய் தந்தாட் கொள்ளுதும் உடனே!'

என்று கூறி மறைந்தார். எம்பெருமானின் இன்னருள் போற்றித் திலகவதியார் மகிழ்வுற்றிருந்தார். பிறகு வட வனலும் கொடுவிடமும் வைத்தாற் போன்று சூலை நோய் குடலை வருத்தவே தருமசேனர் பெருந்துய ரெய்தினர். மந்திர தந்திரம் தன் திறம், மருத்துவம் எதுவுஞ் சிவ பெருமான திறத்தின் முன் செல்லவில்லை. உடனே தனது அருமைத் தமக்கை திலகவதியாருக்கு ஆள் விடுத்தார். திலகவதியார் பிற மத விடுதிக்கு வர மறுத்தார். மீளும் பல பல செய்தும் பயனொன்றில்லை. ஒரு உள்ளெழுச்சி பிறந்தது! சிவநெறி நீத்துப் பிற நெறி புகுந்ததன் தீமை போலும் என்றுதெரிந்தார். உடனே புறச் சமயக் குறிகளை நீத்து வருந்தி வருந்தித் திருந்தித்துணிந்து வீரட்டானம் ஏகினர்.

சிவபாதன்:—

சிவன்செயல் வாழ்க! அடியாரை ஆட்கொளும் அப் பன் வாழ்க!

உலகெலாம் உணர்ந் தோதற் கரியவன்
நில வுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்ச் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்!

[திரைக்குப் பின்னே.]

'அப்ப! அப்ப! ஐய! ஐய! பொறுக்கிலேன்! பொறுக்கிலேன்! அப்ப! உயிர் போகின்றதே!! திலகவதீ இ!'

சிவநேசன்:—ஆ! மருணீக்கியார் திலகவதியார் மடத்திற்கு வந்துவிட்டார்! சிறிதுநேரத்தில் கோயிலுக்கு வருவார்.

[திரைக்குப்பின்னே கோயில்மணியடிக்கிறது.
தேவாரம் முழங்குகிறது.]

பித்தா பிறை சூடீ!
பெருமானே அருளாளா
எத்தான் மறவாதே
நினைக்கின்றேன் மனத் துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால்
வெண்ணெய் நல்லூர் அருட்டுறையுள்
அத்தா வுனக் காளா யினி
அல்லேன் எனலாமே!

சிவபாதன்:—ஆ! எவ்வளவு இனிமை! தேவாரத்திற்கு மந்திரசக்தியும் இன்னெலியமுது முள்ளது; மனத்தை அள்ளுகிறது!

(இருவரும் அதையே பாடுகின்றனர்)

நாயேன் பல நாளு நினைப் பின்றி
மனத்துன்னைப்
பேயாய்த் திரிந் தெய்த்தேன்
பெறலாகா அருள் பெற்றேன்

வேயார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
நல்லூர் அருட்டுறையுள்
ஆயா வுனக் காளா யினி
அல்லேன் எனலாமே!

[செல்கின்றனர்.]

---

## காட்சி உ.

[திலகவதியார் சிவ சிந்தையிலிருத்தல், எதிரே சிவ லிங்கம், திருவிளக்கு, மலர்கள் உள்ளன.]

திலகவதியார்:—

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்துன்
விரையார் கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்ததும்பி
வெதும்பி யுள்ளம்
பொய்தான் தவிர்த்துன்னைப்போற்றி
சயசய போற்றி யென்னும்
கைதான் நெகிழ விடேன் உடையாய்
எனைக் கண்டு கொள்ளே!

தேனினும் பாலினுந் தெள்ளறிவில் தித்திக்கும் சிவமே! அடியார்க்கெளியனே! அல்லலைப்போக்கும் அருமருந்தே! அணுவினும் அணுவே யாதினும் பெரிதே! மறவார் மனத்திற் பெருகும் இன்பமே, போற்றி போற்றி நின்னருள் போற்றி!

எனது தம்பியை இன்றுனது திருவடிக் காளாக்கு அருள் செய். வழி தெரியாது மயங்கி யலேயும் மாந்தர்களை உன் திரு நோக்கால் தடுத் தாண்டுகொள்வாயாக! நீ யின்றி உல குயிர்க்கு யார் துணை?

அப்ப நீ அம்மை நீ ஐயனு நீ அன்புடைய
மாமனு மாமியு நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளு நீ
ஒருகுலமுஞ் சுற்றமும் ஒரூரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்றுவாய் நீ
துணையாயென் னெஞ்சந் துறப்பிப்பாய் நீ
இப்பொனீ யிம்மணி நீ யிம்முத்து நீ
யிறைவனீ யேறூர்ந்த செல்வனீயே!

[திரைக்குப் பின்னல்]

["அப்ப! அப்ப! ஐய!"]

யாரது! ஓ! மருணீக்கி! சிவம் வெல்க!

[வயிற்றைக் கையாற் பிடித்துக்கொண்டு
நொந்து மெலிந்து வருகிறார்]

மருணீக்கி:—

அப்ப! அப்ப! ஐய! ஐய! பொறுக்கிலேன்! பொறுக்கிலேன்! அம்ம! உயிர் போகின்றதே! திலகவதீ இ! திலகவதீ இ இ இ!! அப்ப! அம்மம்ம!! அம்மவோ! ஓ! ஓ! குடல் நோய் வடவனல் போலக் கொதிக்கின்றதே! பொறுக்கிலேன்! அருந்தவக் கொழுந்தே! நறுங்குண வடிவே! சிவத் திருச் செல்வியே! சேவடி டணிகிறேன்! திலகவதீ இஇஇ!! திலகவதீ இஇஇஇ!

[காலில் விழுகிறார்]

திலகவதி:—தம்பீ! எழுந்திரு! எல்லாம் சிவன்செயல். நமச்சிவாய் என்று சொல்!

மருணீக்கி.—நமச்சிவாய! நமச்சிவாய! நமச்சிவாய! அப்ப! சற்று ஆறுதலடைந்தேன்! சிவ பெருமானே! நின் பெருமையே பெருமை! நின் பெயரே அமுதம்!நமச்சிவாய, நமச்சிவாய!

திலகவதியார்:—தம்பீ! சிவ நாமத்தின் பெருமை எல்லையற்றது.

காத லாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தம்மை நன்னெறிக்குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொருளாவது
நாத னும நமச்சி வாயவே!
நம்புவார் நமர் நாவி னவிற்றினல்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொனர் திலகம் உலகுக் கேல்லாம்
நம்ப னும நமச்சிவாயவே!

அழியா இன்பமே சிவம்! எல்லா வுயிர்களும் இன்பத்தையே நாடுகின்றன; அது சிவனே! அவ்வின்பப் பெருமானை உயிர்கள் வழிபட்டுய்யும் நெறியை நம: என்பது குறிக்கிறது. சிவாய நமவெனுங் குளிகையால் ஊனும் உள்ளமும் பொன்போல் ஒளிரும்.

மருணீக்கி:—நமச்சிவாய! நமச்சிவாய! ஆ! ஆ! ஆ! இன்னும் வலி பொறுக்க முடியவில்லையே! திலகவதி இ! இ!

[காலில் விழுதல்]

திலகவதி:—தம்பி! எழுந்திரு! இதோ உன் பாழ் நெற்றியை இத் திருநீற்றால் விளக்கு. சிவ சிந்தையுடன் இதைப் பூசிக்கொள். விபூதியின் மகிமை அளவற்றது. அது அன்பிற்கும், தூய்மைக்கும் அறிகுறி. அன்பும் சிவமும் ஒன்றே!

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்திர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் றிருவாலவாயான் திருநீறே.

மந்திரம், சுந்திரம், தந்திரம், வேதப்பொருள், வெந்துயர் தீர்க்கும் மருந்து, போதந் தருவது, புன்மை தவிர்ப்பது, சத்தியமாவது - திருநீறே! தம்பி! இச் சிவ சின்னத்தைச் சிவ மந்திரத்துடன் அணிந்துகொள்.

[திருநீறு தருதல்]

மருணீக்கி:—நமச்சிவாய! நமச்சிவாய! நமச்சிவாய!

[உடல் முழுதும் நீறணிதல்.]

அப்பா! பாதி நோய் குறைந்ததுபோ லிருக்கிறதே! சிவ பெருமானே நீயே இறைவன்! நமச்சிவாய! நமச்சிவாய! சிவனே போற்றி! தெய்வமே போற்றி!

திலகவதி:—தம்பி, இனிச் சிவனடிபோற்றிச் சிவப்பணி புரிக! அவனே அன்பர்க் கருட்பெருஞ் சோதி!

மருணீக்கி:— அதனினும் அடியேன் அடை நெறி யாது! சிவனே போற்றி! சிவன் செயல் போற்றி! சிவப் பணி யொன்றே செய்விப்பாய் போற்றி!

[திரைக்குப் பின் கோயில் திருமணி, திருப்பாடல்கள் கேட்கின்றன.]

போற்றி யருளுக நின் ஆதியாம் பாதமலர்
போற்றி யருளுக நின் அந்தமாஞ் செந்தளிர்கள்
போற்றி யெல்லா வுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்!
போற்றி யெல்லா வுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றி யெல்லா வுயிர்க்கு மீறும் இணையடிகள்
போற்றியாம் உய்யஆட் கொண் டருளும் பொன் மலர்கள்
போற்றியாம் மார்கழி நீ ராடேலோ ரெம்பாவாய்!

திலகவதி:— தம்பி! திருப்பள்ளியெழுச்சி சேவிக்கச் செல்வோம் வா! இதோ யான் திருவலகும், திருமெழுக்கும் தோண்டியும் எடுத்து வருகிறேன். பரிசுத்தமாக நீ ஆலயம்புகுந்து அரன் அடி பணிந்து அவன் புகழ் ஓதுவாயாக!

உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமேன்
றங்கப் பழஞ்சொற் புதுக்கும எம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன்றுரைப்போங் கேள்
எங்கொங்கை நின் அன்ப ரல்லார் தோள் சேரற்க!
எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க!
கங்குல்பக லெங்கண் மற்றொன்றுங் காணற்க!
இங்கிப்பரிசே யெமக்கெங்கோ நல் குதியேல்
எங்கெழிலென் ஞாயி றெமக் கேலோ ரெம்பாவாய்!

[செல்லுதல்]

மருணீக்கி:—நமச்சிவாய! நமச்சிவாய!

(உடன் செல்லல்.)

## காட்சி ந.

[திரு வீரட்டானேச்சுரர் சந்நிதி. சிவலிங்கத்திற்கு வழிபாடுகள் நடக்கின்றன. தேவாரம் முழங்குகிறது.]

தோடுடை யசெவி யன்விடை யேறியோர்
தூவெண் மதிசூடி,
காடுடை யசுட லைப்பொடி பூசியென்
உள்ளங் கவர் கள்வன்
ஏடுடைய மல ரான்முனை நாட்பணிந்
தேத்த வருள் செய்த
பீடுடைய பிர மாபுர மேவிய
பெம்மான் இவனன்றே!

[தீபாராதனை நடக்கிறது. கோயில் வழிபாடு முழுதும் தேவாரமந்திரம் ஓதியே நடக்கிறது.]

சந்தமா ரகிலொடு சாதிதேக் கம்மரம்
உந்துமா முகலியின் கரையினி லுமையோடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையா ரிணையடி யென்மனத் துள்ளவே!

[திலகவதி, மருணீக்கி வருதல்]

திலகவதி:—தம்பி! சிவனைச் சரண் செய்!

மருணீக்கி:—நமச்சிவாய! நமச்சிவாய! பவப்பிணி தீர்க்கும் பகவனே போற்றி! சிவனே, இன்பமே! செழுஞ் சுடர் மணியே! அனபே! நண்பே! அரனே போற்றி! வாய் மனங் காணு வள்ளலே போற்றி! என்னை யாளும் இறைவா போற்றி! எல்லாம் வல்ல செல்வா போற்றி! நின் பெயர்

உரைத்தேன்; நீளிடர் கடந்தேன்! என்னை வாட்டும் இன்னலைத் தீராய்! அரனே! சிவனே! அம்பலத்தரசே! அடைக்கலம்! அடைக்கலம்! அடைக்கலம்! ஆ! என் உள்ளத்தில் உன் பண் ஒலிக்கின்றது! கொற்றவனே! என் குடல்நோய் தீராய்! அன்பர் அல்லல் அக்கணம் அகற்றுவோய்! அந்தோ பொறுக்கிலேன்! ஆ ஆ! ஆ!

கூற்றாயின வாறு விலக்ககலீர்
கொடுமை பலசெய் தனநா னறியேன்
ஏற்றா யடிக்கே யிரவும் பகலும்
பிரியாது வணங்குவ னெப்பொழுதும்;
தோற்றாதென் வயிற்றினகம் படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேன்! அடியேன்! அதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே!

நெஞ்சம் உனக்கே யிடமாகவைத்தேன்
நினையா தொருபோது மிருந்தறியேன்;
வஞ்சம் மிதுவொப் பதுகண்டறியேன்
வயிற்றோடு துடக்கி முடக்கியிட
நஞ்சாகிவந் தென்னை நலிவதனை
நணுகாமற் றுரந்து கரந்துமிடீர்
அஞ்சேலுமென்னீர் அதிகைக்கெடில
வீரட்டானத் துறையம் மானே!

அப்பனே! அம்மையே அரும்பெருஞ் செல்வமே நின்னை மறந் துய்யேன்! நின்னடி புகுந்தேன்! நலந் தீங்கிலும் உன் நாமம் மறவேன்; பண்ணோடு உன்னைப் பாட மறவேன்!

[பணிதல்.]

......அப்ப! நோய் முற்றும் பட்டென விலகியதே! என்ன வியப்பு! சிவபெருமானே, நீயே, இறைவன்! நோய் முற்றுந் தீர்ந்தது! அன்பர்க்கருளே! ஆனந்தக்கடலே! நின் கருணைக்கு என்ன கைம்மா றிழைப்பேன்! சிவசிவ!

[அசரீரி.]

அன்பனே உன்றன் ஆர்வம் நன்று! தேனினும் இனிய தேவாரத்தைப் பாடி எம்மைப் பண்ணாற் பணிந்தனை! பாகிளந் தமிழார்பண்பனே! உலகெலாம் 'வாகீசன்' என்ன வழங்குக நின்பெயர்!

வாகீசர்:—

எல்லாஞ் சிவனென்ன நின்றாய்போற்றி!
எரி சுடராய் நின்ற இறைவா போற்றி!
கொல்லார் மழுவாட் படையாய் போற்றி!
கொல்லுங் கூற்றொன்றை யுதைத்தாய் போற்றி!
கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி!
கற்றார் இடும்பை களைவாய் போற்றி!
வில்லால் வியனரண மெய்தாய் போற்றி!
வீரட்டங் காதல் விமலா போற்றி!

[பணிதல்.]

அருட்பெருங்கடலே! அறிவுச் சுடரே நின் கருணைப் பெருக்கை எங்ஙனம் உரைப்பேன்! அடியனைத் தடுத்தாண்ட என் அரசே! கொடுமையாயன்பர் குற்றங்களைவாய்! அன்னை யன்புடன் ஆதரவளிப்பாய்! போற்றி போற்றி பூதமுதல்வா!

திலகவதி:—தம்பி, ஆண்டவன் அருளில் அருட்பணிசெய்து வாழ்.

வாகீசர்:—எல்லாம் அவன் செயல்! எல்லாம் அவனுடைமை.

தலையே நீ வணங்காய்—தலை
மாலை தலைக் கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத்
தலையே நீ வணங்காய்!

கண்காள் காண்மின்களோ—கடல்
நஞ்சுண்ட கண்டன் றன்னை
எண்டோள் வீசிநின் றுடும் பிரான் றன்னைக்
கண்காள் காண்மின் களோ!

நெஞ்சே நீ நினையாய்—நிமிர்
புன்சடை நின்மலனை
மாஞ்சாடும் மலை மங்கை மணாளனை
நெஞ்சே நீ நினையாய்!

எல்லாரும்:—*வாகீசர் வாழ்க! சிவ னருள் வெல்க! சிவமயம்! சிவமயம்!*

[*தீபாராதனையாகிறது.*]

எல்லாரும்:—

கற்றுங் கேரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பலமேய
முற்று வெண்டிங்கண் முதல்வன் பாதமே
பற்று நின்றாரைப் பற்று பாவமே!

[*திரைவிழுதல்.*]



## காட்சி ச.

---

[பல்லவராஜன் கொலுவிருக்கை. மந்திரி, சன்மதி, துன்மதி சபையோர் அருகனைத் தொழுது அமர்தல்.]

எல்லாரும்:—

அருகா சரணம்! அமலா சரணம்
முருகார் திருவே! முதல்வா சரணம்!
பெருமா தவனே பெரியோய் சரணம்!
உருகும் அடியார்க் கொளியே சரணம்.
அமைதிக் கடலே அறிவே! நிறைவே!
அமணர்க் கொளியே! அருகா! அருகா!
அமரர்க் கரியோய்! அரஹந்தாணம்!
சமவச் சரணத் தரசே சரணம்!

ஓம் அரஹந்தாணம், சித்தாணம் ஆயுரியாணம்! உவஜ்ஜாணம்! நமோலோயே சவ்வஸாஹூணம்!

[அமர்தல்]

பல்லவராஜன்:—மந்திரி சன்மதி, அருகன் அருளால் நமது குடிகள் நலமா? நமது செங்கோல் செழித்தோங்குகிறதா?

சன்மதி:—அரசே தங்கள் அன்பாட்சியில் அனைவரும் நலந் தழைக்கின்றனர்.

குடிகளிற் குடியே யாவன் கோக்களுட்கோவேயாவன்
அடியவர்க் கடிய னுவன் அற்றவர்க் கரும்பொன் னுவான்;
கோடியவர் கோடியனுவன் குவலயத் துயிரி நெஞ்சத்
துடிதன துள்ளத் தன்பிற் றுடித்திடு நீதி மன்னன்.

அத்தகைய மன்னனைப் பெற்ற குடிகளுக்குக் குறையேது முளதோ? அன்பாட்சி அன்பு பயக்கும். துன்பாட்சி முரணும், கவலையும், அச்சமும், பகையும் போரும் விளைக்கும். அரசிற்கு ஆட்படையினும் அன்புப்படையே அதிக வலிவுடைத்தாதலின் அமைதி நிலவுகின்றது. அரசிறை வருவாயைத் தக்கவாறு கல்வி, தொழில், வாணிபம், சுகாதாரம் ஊர்க்காவல், அறநிலையங்கள், தர்மப் பிரசாரம் முதலியவற்றில் வழங்குவதால், கல்வியும், கலைகளும், ஆற்றலும், ஒழுக்கமும் ஓங்குகின்றன.

அரசே, கிராம ஆட்சி மிகவும் திறம்பெற நடப்பதால் நாட்டாட்சியும் நலம்பெற ஓங்குகின்றது. சிற்றூ ரெற்றூரே அற்றே நாடு! மேலும் தர்ம ப்ரசாரம் ஒழுங்காக நடப்பதால் ஐம்பெரும் பாதகங்களும் குறைந்து வருகின்றன. சிறு தெய்வங்களுக்கு பலியிடல், கள், புலால், இவை பெரிதும் குறைந்து வருகின்றன. குடிகளின் முறையீடுகள் அவ்வப்போது உடனே தீர்க்கப்படுகின்றன. அருட்கொடி வேந்தன் கருணையில் அனைவரும் நலமே.

பல்லவன்:—மனமுவந்தது.

"பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து"

இவை நின்றிலங்கவேண்டுமென்பதே நமதுவிருப்பமும் முயற்சியும். நமது சேவகர்கள் மக்களை அன்புடன் மதித்து நடத்துகின்றனரா?

சன்மதி:—அரசே,

வவேறுங் காட்சி யாளர் மன்னுயிர் நலமே தம்முள்
துடிபெறு மன்பர் வாழ்விற் றூயவர், வாய்மை நோன்பார்,
குடிகளின் மனத்தை யள்ளிக் குடித்தவர், திறமை சான்ற
நடுநிலை வீர ரன்றே நாயகன் பணி வகித்தார்!

அத்தகைய அறநெறிச்சேவகர் பணிபுரியும்போது குடிகள் மகிழத்தடையோ?

பல்லவன்:—அற நினைவும், ஆற்றலும், அறிவழகும் நன்மையும் சிறந்த சன்மதி போன்ற அமைச்சர் இருக்குமட்டும் நமக்குக் குறையென்ன? இனிச் சமய நலனை கவனிப்போம். துன்மதி, நமது மதம் தழைத்து வருகின்றதா?

துன்மதி:—அரசே! முக்குடை வேந்தனடியார் நாள்தோறும் பெருகி வருகின்றனர். சாதுக்கள் தர்மோபதேசம் செய்கின்றனர்.

பல்லவன்—துன்மதி, விபூதியின் வலிமை குன்றிவருகிறதா?

துன்மதி:—ஆ ஹா! கோமயம் முழுதுப் விவசாய இலாக்கா குத்தகையெடுத்து வயலுக்கு உரமாக்குவதால் விபூதி வலி குன்றியே வருகின்றது.

பல்லவன்:—எதிரிகள் கை எப்படி?

துன்மதி:—பீலி பிடித்த கை சுத்தஞ் செய்து வருகிறது. பஞ்சாட்சரத்திற்கு மேல் பஞ்ச நமஸ்காரம் போர் முரசு போல் ஒலிக்கிறது! சந்நிதானத்தின் அன்பும் ஆதரவும் இருக்கையில் அருட்கொடி ஓங்கி வளருவதற்குத் தடையென்ன! நமது ஆட்களும் பல உபாயங்களால் மதத்தைப் பரட்புகின்றனர்.

[சேவகன் வருதல்]

சேவகன்:—மகராசா, பாடலிபுரத்தினின்று பண்டிதர்கள் வந்திருக்கின்றனர்.

பல்லவன்:— நல்வரவு! வருக!

சேவகன்:—மகராஜா உத்திரவுப்படி!

[சேவகன் செல்கிறான்]

(வருதல் பண்டிதர்.)

தத்வசாகரர்:—மஹாராஜ் நமோஸ்து!

எல்லோரும்:—நமோஸ்து!

பல்லவன்:—பண்டிதாச்சாரியரே, வீற்றிருங்கள். தூதர்காள் அமர்ந்திருங்கள். ஏதேனும் புதுமை யுண்டோ? ஏவலுண்டோ?

தத்வசாகரர்:மஹாராஜ்! மிகவும் உன்னதமான பரமேஷ்டிகளால் போற்றப்பட்ட நமது மதத்திற்குப் பெரிய சிறுமை யுற்றது!

பல்லவன்:— ஆ! என்னே!

தத்வசாகரர்:—நமது மதத்திற்குத் தலைமை வகித்துக் கண்ணுயிருந்த தருமசேனர் சடையானுக்காளாகி நின் சமயத்தை அழித்தார்!

பல்லவன்:—ஆ! இச்செய்தி எனது பெருமையில் இடி விழுந்ததுபோலிருக்கிறதே! அன்பீர், எப்படி நிகழ்ந்தது?

அதிகாயன்:—மகராஜ்! தெரியாதா; பழைய வாசனையால் படு தந்திரஞ் செய்து குடல் நோய் கொதிப்பதாக வெகு பாடுபட்டார்! மந்திரம் மருந்து எல்லாம் வழங்கினேம்.

சதிசேனன்:--மஹாராஜ்! வலிக்குமருந்து. வம்பிற்குமருந்தோ? எல்லாம் சூட்சி! நமது மந்திரங்கள் பலிக்கவில்லையென்று

கம்பி நீட்டி விட்டார். தமது தமக்கை திலகவதி அவருக்கு விபூதிப்பட்டை போட்டுவிட்டாள்!

பல்லவன்:—ஹா! அப்படியா! கெட்டது நமது சமயம்! மத விஷயத்தில் மந்த மொண்ணுது! பெரியீர் இதற்குப் புரிவதென்ன?

சதிசேனன்.—மஹாராஜ் எங்கள்வயிறு கொதிக்கிறது! நமது சமயத்திற்கு அவன் உடனே திரும்பவேண்டும். இன்றேல் அத்தகையோன் பிழைத் திருக்கலாமோ?

தத்வசாகரர்:—மஹாராஜ்! நமது சமயத்தைப் பழித்தான்! நினது நெறியை அழித்தான்! நம் அனைவருக்கும் சிறுமை இழைத்தான். பிற சமயம் புகுந்து இழிவு செய்தான்.

அதிகாயன்:—அனைவரும் நம்மை ஏளனஞ் செய்வாரன்றோ? ஆதலின் .........(பல்லைக்கடித்து கழுத்தைக்காட்டுகிறான்.)

துன்மதி:—அரசே! தயையும் தாமதமும் வேண்டாம். உடனே தகுந்தபடி அவனை.........

பல்லவன்:—தெரிந்தது! அதுவே நமதுறுதி. சன்மதி, துணையமைச்சருடன் சேனை வீரரைக்கொண்டு சென்று நமக்குப் பிழை செய்தவனை எப்படியேனும் எம்முன் நிறுத்துவாயாக!

சன்மதி:—காவல, நினது கட்டளை புரிகுதும்.

[செல்கிறான்]

பல்லவன்:—துன்மதி, இவனை எவ்வணம் இணக்கலாம்?

துன்மதி:—சுட்ட செங்கல்லை இளக்கமுடியுமா? அதை நொருக்குவதே சூழ்ச்சி!

பல்லவன்:—தத்துவ சாகரரே, வாதில் அவரை வெல்ல லாமே?

தத்வசாகரர்:—அப்பா! த்ருமசேனர் கரைகடந்த அறி வாளி. அவரோடு வாதுசெய்வதார்? மேலும் அவ்வாதில் நாம் தோற்றால் இன்னும் இழிவு!

சதிசேனன்:—வாதா? அவன் செய்தது சூது? அதற்கு நாம் செய்வது தீது! இன்றேல் மானம் பிழைக்காது!

பல்லவன்:—முதலில் என்ன செய்யலாம்?

சதிசேனன்:—நீறு பூசி வருவான். அதை அழிக்கச்சொல் லுங்கள்.

பல்லவன்:—நீற்றை அழிக்காவிடில்!

துன்மதி:—அவனையே அது வாக்கவேண்டும்.

அதிகாயன்:—ஆ! அதுவே சரி!

பல்லவன்:—சரி துன்மதி! பண்டிதர்களுக்கு நல் விருந்து செய்வி.

துன்மதி:—அப்படியே மஹாராஜ்! வயிற்றிற்கும் மனத்திற் கும் நல்ல விருந்து செய்விக்கிறேன்.

[எல்லாரும் செல்லல்]

பல்லவன்:—ஒருவன் பிறந்த மதத்தினின்று மனத்தைத் திருப்புதல் கடினமே! ஆயினும் நமது மதத் தலைமை வகித் து நம்மை வஞ்சித்த இத் தரும சேனனைச் சரியானபடி தண்டிக்கவேண்டும். மனமே, இரும்பாகிவிடு!

[செல்கிறான்]



## காட்சி ரு.

**வாகீசர்:**—(உழவாரப்பணிசெய்துகொண்டே)

நம்பனே! யெங்கள் கோவே நாதனே ஆதி மூர்த்தி!
பங்கனே! பரமயோகி! யென்றேன்றே பரவி நாளும்
செம்போனே பவளக் குன்றே திகழ்மலர்ப் பாதங்
[காண்பான்
அன்டனே யலந்து போனேன் அதிகை வீரட்ட னீரே!

அன்பர்காள், அறிவும், அன்பும், பணியும் உண்மையும் சிவ நேயமுங்கொண்டு உய்மின்! உலகெலாம் அவன் கோயில்; உயிரெலாம் அவன் மேனி; உணர் வெலாம் அவன் அறிவு; மனமெலாம் அவன் அன்பு, செயலெலாம் அவன் வழிபாடாக்கி, சிவ சிந்தையிற் சிவக் கலப்புடன் வாழுமின்!

**சிவநேயன்:**—அடிகாள், சிவக்கலப்பின் தன்மையைத் திருவாய்மலர்ந் தருள்க! ஆன்மா சிவனுடன் அத்துவித நிலையில் எப்படி யுள்ளது? எப்படிக் கூடுகிறது? அருள் புரிக.

**வாகீசர்:**—நமச்சிவாய! நமச்சிவாய! கேளுங்கள்.

அல்லிமலர் நாற்றத் துள்ளார்போலும்;
அன்புடையார் சிந்தை அகலார்போலும்
சோல்லின் அருமறைகள் தாமே போலும்
தூநெறிக்கு வழிகாட்டுந் தொழிலார்போலும்
வில்லிற் புரமூன் றெரித்தார்போலும்
வீங்கிருளு நல்வெளியு மானார்போலும்
எல்லி நடமாட வல்லார்போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீசனாரே!

நல்லீர், அயரா அன்பால் அரன்கழலிருமின்! அறிவா லறிந்து அன்பாற் கலமின்; அருளாற் சிவன் உமை ஆண்டு கொள்வான்! ஆணவம், மாயை, கன்மமாகிய பாசத் தளையிற் பட்டார் காணார்; ஆனால் அவருள்ளும் அரன் மறைந் துள் ளான். மறக்கருணையாலே பிறப்புக ளீந்து, மெல்ல மெல்லத் தொல்லழுக்கறுத்து, ஆன்மாக்களை அவன் ஆண்டுகொள்கின் றான். பாசம் விலகிற் பசுபதி கூடும். கமலம் மலர்வது கதிர வன் ஒளியிலே! அன்பர்உய்தலும் அவனருளாலே. அன்பர் அருள்பெற்று இன்பமெய்துவார். அன்பு சிவமே. சிவமே அன்பு. பதியறிவொளிரப் பளிச்சிடும் அன்பு; பூவில்மண மும், புனலிற் றண்மையும், விறகில் தீயும் போல் விரவியுள் ளான்—அவன் அத்துவிதப்பொருள்; யாதினுங்கலந்துளான்.

சிவபாதன்:—அடியாரே, சிவன் மாற்றமும், திரிபுமற்ற ஒருவனே யாவனன்றோ? அவன் எங்குமிருத்தல் எங்ங னம்? எல்லாம் புரிதல் எங்ஙனம்?

வாகீசர்:—அடியார் கேட்கட்டும். இன்பமேயான அம்பல வாணன், ஆகாயத்தை அணிந்து விளங்குவான்; அது தகரா லயம், சிற்றம்பலமெனப்படும். அப் பரமாகாய தேவதை யே பராசக்தி, ஆணை, அம்பிகை. சிவமும் சக்தியும் சேர்ந் தே இறைவன். சிற்சக்தி, ஆனந்த சக்தி, இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியாசக்தி என ஐந்தும் அப் பராசக்தியிற் போந்து சிவபெருமானின் ஆணையை நிறைவேற்றுகின்றன. அவருடைய அருட் சக்தியெங்குமுள்ளது; ஆக்கலும் அழி த்தலும் மாயாசக்தியே! செகமனைத்தும் சிற்சக்தியாடல்.

சிவநேசன்:—ஆனால் சிவனுக்கும் ஆன்மாக்களுக்கும் எப் படி உறவு?

வாகீசர்:—சமவாய சம்பந்தத்துடனுள்ள அருட்சக்திமூலம் அனைத்துமா யுள்ளான்; அவனன்றி அருளில்லை; ஆணை

யில்லை; அனைத்தும் அவனே; அவன் எல்லாமாய் அல்லவு மாய் ஏகமாய் அநேகமாய் உள்ளான். அவனன்றி நினைப்பில்லை அருளுமில்லை. இச்சா, கிரியா சக்தியால் அவன் அனைத்தையும் ஆக்குகிறான்; ஞான சக்தியால் மெய்யுடனுயிர் போல் அனைத்திலும் கலந்து விளங்குகிறான். சிவன் சூரியன்; அவனுடைய சைதன்யசக்தியான சிவை பகலொளி போன்றவள். அவன் பரிபூரணன், நின்மலன், நிச்சலன், ஞானானந்த மயன். அவனன்றி எதுவு மில்லை; அவனுடைய சைதன்யமே இயல்பாகப் பரவி அனைத்தும் புரிகிறது!

சிவபாதன்:—அவனைக் காண்பதெப்படி?

வாகீசர்:—அருளாலன்றி அவனைக் காணார்! அன்பால் அருளாம்; அருளால் அறிவாம்; அறிவால் ஒளியாம்; ஒளியால் இன்பாம்; இன்பால்உண்மையாம்; உண்மையில் உள்ளதாம்.

சிவநேசன்:—அவன் அருளை அடைவதெப்படி? ஆன்மாவை அழுக்கு சூழ்ந்துள்ளதே? அழுக்கற்று அறிவு முற்றுவதெங்ஙனம்? அடியார் அருளுக!

வாகீசர்:—"ஊனக் கண் பாசம் பதியை யுணராது" ஞானக் கண் மலரவேண்டும். சரியை கிரியையாற் பக்குவப்பட்டு யோகத்தால் உறவளாவி இருவினை மாறித் தவத்தால் ஆணவ அழுக்கற்ற சுத்தமுற வேண்டும். குருலிங்க சங்கமத்தாலும் பரிபாக மெய்தும். மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாக வணங்கினோர்க்கும் தத்துவ மொழிசொல்ல சற்குரு வாய்ப்பான். சரியை கிரியை யோகம் ஞானம் நான்கும் அரும்பு, மலர், காய் கனிபோன்றன. இவற்றால் இருவினை யொப்பும், மலபரிபாகமு மெய்தி ஆன்மா பழுக்கும். புறத்தனை யற்று சிவநேயம் முதிரும். அன்பு பழுத்தால் சற்குரு தரிசனமாகும், சத்தி நிபாதம் (ஆண்டவன் அருட்

சக்தி) பதியும். எம்பெருமானை ஓங்காரம அல்லது ஐந் தெழுத்தால் உள்ளே எப்போதும் வழிபடும் இடையறு அன்பு பெருகப் பெருக அவனை ஞான சொரூபியாயும், நிர்க்குண, நின்மல, தற்பர, சதாசிவனுகவும் உணரலாம். பிறகு அவனுக்கே சரணுகி, ஊணுகி சத்தோடு கலந்து சிவ ஞானப் பெருக்கில் ஜீவன் முத்தனுகிச் சிவக்கலப்பில் சிவா னந்தந் திளைத்திருக்கலாப். அவனிலேயே உறையும் விஞ் ஞான கலர்க்குத் தானே ஞானம் விளக்குவான்; ப்ர ளயா கலர்க்கு தெய்வ வடிவாகவும், சகலர்களுக்கு மனித வடிவாகவும் வந்து ஞானம் புகட்டுவான். அன்பால் அவனைப் பற்றினேரை அவனே நடத்துவான். அன்பர்க்கு யாதும் குறையில்லை. அன்பர்காள், உழவாரப்பணி முடிந்தது. உள்ளே சிவ உணர்வு என்னை யீர்க்கிறது! சுருங்கக் கேண்மின்!

மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை
[வித்திப்
போய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனு நீரைப்
[பாய்ச்சித்
தம்மையு நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே!

ஆ! எனது வேகங்கெடுத்தாண்ட வேந்தா! பரமானந் தப் பாற்கடலாக எனது உள்ளத்தே நிறைந்த சிவானந் தமே! எண்ண எண்ணத் தண்ணு ரமுதமே! நமச்சிவாய! நமச்சிவாய!

உடம்பெனு மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய் யட்டி உயிரெனுந் திரி மயக்கி
இடம்படு ஞானத் தீயால் எரிகோள இருந்துநோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே!

நமச்சிவாய! நமச்சிவாய!

[ தியானத்தில் அமருதல். அடியார்களும் தியானித்தல் ]

[ வருதல்—குண்டன், முண்டன். ]

குண்டன்:— அட இந்தா, இருக்காரடா!

முண்டன்:—என்னமா இருந்தவர் இப்படி மாறி விட்டார்: அட இதைக்கண்டாலும் கண்டு முட்டு என்பாங்களே ஐய ருங்க!

குண்டன்:—பூசனிக்காய்ச்சாமியாராய் விட்டாரடா! என்ன பூச்சு! அடே யப்பாண்டே! உடம்பெல்லாம் ஒரே சுண் ணும்பா அடிச்சுக்கொண் டிருக்கிறாரடா!

முண்டன்:—அத்தோடு சரியா? இன்னம்பாரடா! தாவடம் போட்டிருக்கார். இதோ பாரடா முன்னே பீலி; இப்போ துடைப்பம்; ஆள் உதித்திருக்கிறாரடா! சந்தோச்சம்!

குண்டன்:—நமக்கேனடா வம்பு. மந்திரி எஜமான்வந்திருப்ப தாகச் சொல்லுவோ மாடா! நம்மவேலை நமக்கு!

[ மெல்ல மெல்ல அணுகி ]

தருமசேனரே! ஐயா! சாமி! ஐயா அஅ! சே பேச்சு மூச்சைக் காணோம்.

[சிவபாதமும் சிவநேசனும் விழித்து]

சிவபாதம்:—நீர் யார்! இவண் எங்கு வந்தீர்?

முண்டன்:—இரண்டு பேர் முழிச்சிக் கொண்டாங்க! செய் தியைச் சொல்லுவோம். ஐயா பல்லவ மஹாராஜா மந்திரி எஜமான் வந்திருக்காங்க—தருமசேனரை அழைத்துச் செல்ல.

சிவநேசன்:—மந்திரியார் இங்கு வரட்டும். அடியார் நிட்டை யினின் றெழுந்ததும் அவர்களைக் காண்பார்.

துண்டன்:—சரி அப்படியேசொல்கிறோம்! வா, போவோம்.

முண்டன்:—இவர் வராட்டி என்ன செய்வதடா! மஹாராஜா கடுமையாக உத்திரவு போட்டிருக்கிறாரே!

துண்டன்:—ஒரே கட்டு! ஒரே தூக்! காஞ்சிவரம்!

முண்டன்:—ஆம் ஒரே தூக்! ஒரே தூக்!

[செல்கின்றனர்]

[வாகீசர் விழித்தல்]

வாகீசர்:—

காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமையஆட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டி னோமே!

[சுற்றி நோக்கல்]

நமசிவாய! நமசிவாய!

சிவபாதம்:—அடியாரே, இப்போதிங்கு இரண்டு ஆட்கள் வந்தனர்.

வாகீசர்:—எதற்காக?

சிவபாதம்:—பல்லவ ராஜன் மந்திரி தம்மை அழைத்துச் செல்ல வந்திருக்கிறாராம்.

[சன்மதி வருதல்]

ஸன்மதி:— தருமசேனரே நமோத்து!

வாகீசர்:—அடியார் வருக!

ஸன்மதி:—பல்லவராஜன் தங்களை உடனே அழைத்து வரச் சொன்னான்.

வாகீசர்:—அரசனிடம் நமக்கு வேலையென்ன?

ஸன்மதி:—அரசன் கட்டளை; உடனே வருக!

வாகீசர்:—என தரசன் சிவபிரான்! அவன் தாளிணையை விலகாதிருப்பதே அவன் கட்டளை.

ஸன்மதி:—தருமசேனரே, அரசனைக் குடிகள் பணிதல் அழகன்றோ?

வாகீசர்:—சிவ சிவ!

நாமார்க்குங் குடி யல்லோம் நமனை அஞ்சோம்!
நரகத்தில் இடர்ப்படோம் நடலை யில்லோம்!
ஏமாப்போம்! பிணியறியோம் பணிவோ மல்லோம்!
இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை!
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்க வெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே!

சிவ னடியார்க்குச் சிவனே இறைவன்! அவர்கள் அவனுக்கே ஆட்பட்டவர்-பிறர் குடிகளாகார்! அஞ்செழுத்தின் உண்மை கண்டோர் எதற்கும் அஞ்சார். பரமன் பணியே பணிவுடன் பூணுவர்! மேலும் சிவப்பே றுடையார்க்குப் புவிப்பேறுடைய புரவலரால் ஆவ தென்னே! மாதர், கலைஞர், கூத்தர் பரிசில் வேண்டுவோர் மன்னனை

னோக்குவர். எமக்குச் சிவனருளன்றே ஒப்பற்ற செல்வமும் அரசுஞ் சீரும் பேறும்! நமச்சிவாய! நமச்சிவாய!

நாவார நம்பனையே பாடப் பெற்றோம்
நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம்!
ஆவாவென் றெமை யாள்வான் அமரர் நாதன்
அயனோடு மாற் கறிவரிய அனலாய் நீண்ட
தேவாதிதேவன் சிவனென் சிந்தை
சேர்ந்திருந்தான்; தென் றிசைக்கோன் றானேவந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென்றாலுங்
குணமாகக் கொள்ளோம் எண் குணத்துளோமே!

சிவநேசன்:—திருச்சிற்றம்பலம்!

ஸன்மதி:—தங்கள் துணிபு சரியே. ஆனால் எமது பணி நிறைவேறத்தான் வேண்டும். அரசன் ஆணை கடுமை. அன்பு கூர்ந்து புறப்படுங்கள்!

வாகீசர்:—சிவனே, நீ எங்கு முள்ளாய்! எங் கிருப்பினும் உனது திருவடி நிழலே! அடியார்களே சென்றாலென்ன?

சிவபாதம்:—அந்தோ அடியாரே அவர்கள் பொல்லாச் சூட்சியாளர். எதுவும் செய்வர்.

வாகீசர்:—அச்சமெதற்கு? இவ்வுயிருடல் மனமெல்லாம் ஈசனார்க்கு! எங்கும் சிவன் துணை யுண்டு!

அங்கத்தை மண்ணுக் காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கோத்த மேனிச் செல்வா சாதனாள் நாயே னுன்னை
யெங்குற்று யென்ற போதா இங்குற்றேன் என் கண்டாயே!

அன்பீர் சிவனருள் துணிவுறுத்துகிறது. எதுவரி னும் இறைவன் செயல்!

ஸன்மதி:—உடனே புறப்படுங்கள்!

வாகீசர்:—அடியார்களே, யான் மீளுமட்டும் இவ்வுழவாரப் பணியைச் செய்யுங்கள்! சிவனையே பற்றுக்கோடாகக் கொண்டிருங்கள்! எவ்விதத் தீமையும் அணுகாது!

திருவேயென் செல்வமே தேனேவானோர்
    செழுஞ்சுடரே! செழுஞ்சுடர்நற் சோதிமிக்க
உருவேயென் னுறவே யென் ஊனே ஊனின்
    உள்ளமே உள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற்
    கருமணியே மணியாடு பாவாய் காவாய்!
அருவாய வல்வினைநோய் அடையாவண்ணம்
    ஆவடுதண் டுறையுறையும் அமரரேறே!

எனக்கு வரும் தீமைகளுக்கு எம்பிரான் உளன்.
நமச்சிவாய! நமச்சிவாய!

[ மந்திரி, வாகீசர் செல்லுதல் ]

அடியார்:—வாகீசர் நீடூழி வாழ்க! சிவனருள் வெல்க! அடியார் பெருமை விளங்குக!

அரனை யுள்குவீர், பிரம னாருளெம்
பரனை யேமனம், பரவி உய்ம்மினே!
நாத னென்பிர்காள், காத லொண்புகல்
ஆதிபாதமே ஓதி உய்ம்மினே!

படைப்பாய், காப்பாய், துடைப்பாய் போற்றி! இடரைக் களையும் எந்தாய் போற்றி!

நமச்சிவாய வாழ்க! நாதன்றாள் வாழ்க!

[ செல்லுதல் ]

## காட்சி ௬.

[பல்லவராஜன் கொலுவிருக்கை. துன்மதி, சதிசேனன், அதிகாயன் வீற்றிருக்கின்றனர்.]

பல்லவன்:—துன்மதி, இன்னுமேன் நமது ஆட்கள் வரவில்லை?

துன்மதி: அங்கே எதிரிகள் என்ன வாது செய்கின்றனரோ?

பல்லவன்:—நாம் செய்த முடிவைத் துணிந்து நிறைவேற்ற வேண்டும்.

சதிசேனன்:— அதற்குத் தடையா! செங்கோல் தங்கள் கையிலிருக்கையில், தாங்கள் எங்கள் கையா யிருக்கையில் எதையுட செய்ய வல்லோம்! அவனுக்குச் சரியான படி பாடங் கற்பிக்கவேண்டும்.

[திரைக்குப்பின்னே]

அப்பன் நீ! அம்மை நீ! ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒரு குலமுஞ் சுற்றமும் ஓருரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையாயென் நெஞ்சந் துறப்பிப்பாய் நீ
இப்பொன் நீ இம்மணி நீ; யிம்முத்து நீ
இறைவன் நீ ஏறூர்ந்த செல்வன் நீயே!

பல்லவன்:—இனிய பாட்டு! அவனே போதும்.

[குண்டன், மூண்டன் வாகீசரைத் தூக்கிப் பாய்ந்து வருதல்]

முண்டன், துண்டன்:—ஒரே தூக்! ஒரே தூக்! இத்தான் நம்ப மந்திரம். மகா ராஜா இதோ ஆசாமி!

பல்லவன்:—நல்ல காரியம் செய்தீர்கள். சன்மானம் பெற்றுக்கொள்ளுங்கள்.

இருவரும்:—கும்பிடுரோம் மகா ராஜா! [செல்லல்]

வாகீசர்:—

[சிவ சிந்தையுடன் வணங்கி நின்று,]

பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டு கண்டு களித்திகாண் நெஞ்சமே!
வண்டு லாமலர்ச் செஞ்சடையேகம்பன்
தொண்ட னுய்த்திரி யாய்துயர் தீரவே!

துன்மதி:— தருமசேனு! இது அரச சமூகம்! தெரியவில்லையோ?

வாகீசர்:—

பண்ணில் ஓசை பழத்தினில் இன் சுவை
பெண்ணொ டாணென்று பேசற் கரியவன்
வண்ண மில்லி வடிவுவே றுயவன்
கண்ணில் உண்மணி கச்சியே கம்பனே!

அதிகாயன்:—பாட்டை நிறுத்து, இதோ பார்!

[கையைப்பிடித்து இழுக்கிறுன். வாகீசர் சுற்றி நோக்குகிறுர்.]

சதிசேனன்:—என்ன மிரட்டல்! மகராஜா இவனை விசாரிக்கட்டும். அடே, வணக்கமாய் நில்!

பல்லவன்:—தருமசேனு! இதோ பார்! இதென்னவேடம்! என்ன பூச்சு! உத்தமமான நமது சத்தியமதத்தை விடுத்து

ஏன் இழிந்தாய்? உனக்கு எவ்வளவு உயர்ந்த பதவி கொடுத்திருந்தோம்! எல்லாம் விடுத்து இப்படிச் சாம்பலாண்டியாவது நலமா, பொருத்தமா? இக்கோலத்தைநீக்கு. அருகனை வணங்கித் திருந்து. உனக்கு மீண்டும் பதவிதருவோம்.

வாகீசர்:—அரச, அருகனை யான் இகழவில்லை. சிவனைப் போற்றுகிறேன். அவனுக்கும் அவன் அடியார்க்கும் வணக்கம்!

சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போமல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லராகில்,
அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில்
அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே!

சதிசேனன்:—அரஹந்த அரஹந்த! ஆ! இது கேட்டு முட்டு.

[ காதை மூடிக்கொள்ளல் ]

மன்ன! அஹிம்சையை விரதமாகப் பூண்ட தமது தூய முன்னிலையில் ஆவுரித்துத் தின்பதைச் சொல்லும் நாவை அறுத்தால் இந் நாவரசு அப்படிப் பாடமாட்டான்!

பல்லவன்:—தருமசேனா, முன்னே தத்வார்த்தங்களை உபதேசஞ் செய்தாய், கேட்டோம்; இப்போது நீ மொழிவது அத்தனையும் எமக்குப் பகை! எம்மைச் சிறுமை செய்தாய்; தந்திரஞ்செய்து சமயந்துறந்தாய்! எமது மதத்திற்குப் பகையான கோலம் பூண்டாய்! என்ன துணிவு, என்ன ஊக்கம்!

சதிசேனன்:—இந்தத் தொழில் எத்தனை நிமிஷம்!

வாகீசர்:—ஐயன்மீர் ஏன் பதற்றம்? என்னை உய்வித்தவன் இறைவன்! அவன் அன்பைப் பாடுங்கள்! மனித வாழ்வு நிலையோ? பாசத்தை அறுத்துப் பசுவைப் பதியில் ஒன்றுவிக்க முயலுங்கள்! அன்பு வளர்மின்; அகந்தை ஒழிமின்!

திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்
 தீவண்ணர் திறமொருகாற் பேசாராகில்,
ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகில்,
 உண்பதன்முன் மலர் பறித்திட் டுண்ணா ராகில்,
அருநோய்கள் கெட வெண்ணீ றணியா ராகில்
 அளியற்றார் பிறந்தவா றேதோ வென்னில்
பெரு நோய்கள் மிக நலியப் பெயர்த்துஞ் செத்துப்
 பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே!

சதிசேனன்:—என்ன அவச்சொல் அரச சமூகத்தில்! இறக்கின்றார்—இதோ யானரெப் பார்ப்போம்.

[ மன்னனுக்குக் குறிப்புக் காட்டல் ]

பல்லவன்: - இனிப் பொறுக்கோம்! உனக்கு பித்தேறிவிட்டது!

வாகீசர்:—ஆம். அத்தன் பித்தன் அடியேன்!

பல்லவன்:—அத்தன் வீரட்டானத்தில். இப்போது நீ என் கையிலிருக்கிறாய்!

வாகீசர்:—எவர் கையிலும் யானில்லை; ஈசன் அடி நிழலிலேயே உள்ளேன்!

பல்லவன்:—என் வாளுக்கு அஞ்சாயோ? (வாளை உருவி)

வாகீசர்:—இவ வாழ்வுக்கு அச்சமில்லை; வாளுக்கும், கோளுக்கும், தோளுக்கும் பாழுக்கும் அஞ்சேன்; அரன் தாளுக்கே அஞ்சுவேன்!

பல்லவன்:—இக் கொழுத்த நாக்கை அறுத்தால்?

வாகீசர்:—என் கரத்தால் சிவனைப் பூசிப்பேன்!

பல்லவன்:—கைகளை யறுத்தால்!

வாகீசர்:—எனது காலால் காலகண்டன் கோயிலைத் திரு வலம் வருவேன்!

பல்லவன்:—அக் கால்களையும் தடிந்தால்!

வாகீசர்:—என் முண்டத்தால் சிவன் கோயிலை அங்கப்பிர தட்சிணஞ் செய்வேன்.

பல்லவன்:—உன் முதுகைப் பிளந்தால்..........

வாகீசர்:—என் உள்ளத்தால் அவனை உண்மையாக வணங்கு வேன்!

பல்லவன்:—உன் கழுத்தை அறுத்தால்!

வாகீசர்:—கழுத்தை யறுத்தால் இக்காய வாழ்வு தீயும்! பிறகு எனது சூக்கும சரீரத்தால் சிவனை வழிபடுவேன். அன்பர்காள், பரம்பொருள் அத்துவாதீதன். மந்திரம் வர் ணம் பதம் புவனம், தத்துவம் கலை என்பது ஆறு அத்து வாக்கள். அதில் தத்துவம் முப்பத்தாறாகும். பூதங்கள், மாத் திரைகள், அறிவுருப்பு, செயலுருப்பு இவை ஐந்தைந்துசேர் த்து இருபது; உட்கரணம்நான்கு. இருபத்தைந்தாவதுதத் துவம் புருஷன்; பின்னே இராகம், வித்தை, நியதி காலம்,

கலே, அசுத்த மாயை, சுத்தவித்தை, ஈசுரத்வம், சதாக்கி யத்துவம், சத்திதத்வம், சிவதத்துவம்ஆகியதத்துவ அத்து வாக்களில் தாங்கள் சிதைப்பதாகக் கூறும் இவ்வூனுடல் ஐம்பூதக்கூடு. இது கலேந்தாற்கலேக! இதில் என்றும்அழியா துள்ள ஆன்மா இறைவ னடியை இணேயறுது புல்லி நிற் கிறது. அதுவே இதன் வாழ்வு, இன்பம் எல்லாம்.

சதிசேனன்:—போதும்! தத்துவப் பித்தா! நின் நீற்றை யழி!

வாகீசர்:—நீறு வீறு! சிவப்பேறு! ஆதலால் யான் அணிந்த வாறு!

பல்லவன்:—நாங்கள் சந்தனங் குங்கும மிடுகிறேம்; அவ் வாறு செய்!

வாகீசர்:—எமக்கு அவை வெறுப்பில்லே. நீறு சிவம்; குங்கு மம் சக்தி, சந்தனம் சிவ மணம்; எல்லாம் எமது சர்வ சம ரச மதத்திற்குரியதே!

பல்லவன்:—என தாணே! எதிர்பேசாதே! நீற்றை யழி!

வாகீசர்:—ஆணே யாதல் பராசக்தி யன்னேயே! அரன் அருளே! அவள் மூலம் அவன் அனேத்தும் புரிகிறுன்! அவன் அருள் என்னே ஆண்டுகொண்டு நடத்துகிறது! அவன் இச்சை என் மேனியை வெண்ணீற்ருல் புனிதம் ஆக்கியது!

பல்லவன்:—நீற்றை யழியேல் உன்னேயே நீற்றி விடுவேன்! அச்சமில்லேயா! உயிர் போய்விடும்! இதோ என் ஆணே பிறக்கப்போகிறது! மல்லர்காள்!

துண்டன்:—ஹா, ஓரே தூக்! இதோ!

பல்லவன்:—என்னை அஞ்சு! எனது ஆணை பொல்லாது.

வாகீசர்:—சிவ, சிவ, சிவ, சிவ அரனே உன் ஆணை யருள்க!

வானம் துளங்கிலென்? மண்கம்ப
மாகிலென்? மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு
மாறிலென்? தண்கடலும்
மீனம் படிலென்? விரிசுடர்
வீழிலென்? வேலை நஞ்சுண்(டு)
ஊனமொன் றில்லா ஒருவனுக்
காட்பட்ட உத்த மர்க்கே!

[சதிசேனன் மன்னனை நோக்க, மன்னன் துன்மதியை நோக்க அவன் மல்லரை விழிக்கிறான்]

மல்லர்:—ஹா, ஹூம் தூக்! ஓரே தூக்!

[ வாகீசரை எடுத்தேகுகின்றனர் ]

பல்லவன்:—என்ன துணிவு! என்ன வீரம் அஞ்சாமை! பசுப்போல தர்மோபதேசஞ் செய்துகொண்டிருந்தவனுக்கு எவ்வளவு துணிவு பிறந்தது!

துன்மதி: —மஹாராஜ் இத்தகையோனை உயிருடன் விட்டால் நமக்கு அவசியம் கேடு நேரிடும்.

பல்லவன்:—இந்த நீற்றறைக்குந் தப்புவானா? அவன் நீற்றறையில் வருந்தும் கோலத்தைக் காண்போம்.

[ அனைவரும் செல்லல். ]



## காட்சி எ.

[பல்லவன் தனித்து துன்மதியுடன் பேசுகிறான்; சதி சேனனும் பக்கத்தில் இருக்கிறான்]

பல்லவன்:—துன்மதி, இன்று அவனை நீற்றறையிட்டு எத்தனை நாள் ஆயிற்று!

துன்மதி:—ஏழு நாள்!

பல்லவன்:—இதற்குள் நீறாகியிருப்பானா!

துன்மதி:—இருக்கலாம்!

பல்லவன்:—அதற்கும் தப்புவானோ?

துன்மதி: —தப்பினாலும் தப்பலாம்.

பல்லவன்:—எப்படி?

துன்மதி:—மந்திரங்கற்ற மாயாவி!

பல்லவன்:—அப்படித் தப்பினால் பிறகு அவனை என்ன செய்யலாம்?

துன்மதி:—மஹாராஜா சித்தம் போலச் செய்யலாம்!

பல்லவன்:— அந்தோ! எனக்கொன்றுந் தோன்றவில்லையே!

அவன் துணிவு என் துணிவை நடுக்குகிறதே!

சதிசேனன்:—எல்லாம் மந்திரம் செய்யும் வேலை மஹாராஜா.

பல்லவன்:—நீற்றறைக்குந் தப்பினால் என்ன செய்யலாம்?

சதிசேனன்:—அவ்வளவு துணிந்த நெஞ்சனை நஞ்சு என்ன செய்கிறதென்று பார்ப்போம். நஞ்சு கலந்த பாலமுதை ஊட்டுவோம்.

பல்லவன்:—துன்மதி, இது சரியா?

துன்மதி:—அதுவே சரி.

பல்லவன்:—அதற்கும் தப்புவானே?

துன்மதி:—தப்பினலுந் தப்பலாம்?

பல்லவன்:—ஏன்?

துன்மதி:—மாயாவி.

பல்லவன்:—பார்ப்போம்!

சதிசேனன்:— மஹராஜ் வஞ்சித்தவன் நஞ்சுண் டிறக்கட்டும்!

பல்லவன்:—நீற்றறையைப் பார்க்கச்சென்ற மல்லர்கள் ஏன் இன்னும் வரவில்லை?

[ மல்லர்கள் வருதல். ]

துண்டன்:—மகராசா அஅஅ!

பல்லவன்:—என்ன? பகைவன் சாம்பலானனா?

துண்டன்:—சாம்பலா? ஊறின மொச்சைக்கொட்டை மாதிரி உதிச்சிருக்கான்! மேனி பள பளா என்குது. அதுக்கு மேலே பாட்டுப் பாடுகிறான்!

பல்லவன்:—என்ன வியப்பு! எங்கே அவன்?

[ முண்டன் வாகீசரைத் தூக்கி வருதல். ]

முண்டன்:—ஒரே தூக்! மகராசா பாருங்கள்! இவன் மாயத்தை!

[ எல்லாரும் வியத்தல் ]

பல்லவன்:—இவன் நீறுவானென் றிருந்தோம்! முன்னி லும் இப்போது ஒளியாகி யன்றோ காண்கிறான்! அடா! நீற்றறைக்கு எப்படித் தப்பினாய்! எந்த மந்திரத்தால்?

வாகீசர்:—சிவன் திறத்தால்!

பல்லவன்:—நெருப்பு சூழ்ந்த நீற்றறை எப்படி யிருந்தது? சுடவில்லையா?

வாகீசர்:—

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே!

அன்பர்காள்! எம்பெருமானார் தண்ணடி நீழலில் என்னை முற்றும் ஈடுபடுத்தினேன்; பிற மறந்தேன்! நீற்ற றையும் அவன் குளிர் நிழல்போன் றிருந்தது. உளமெப் படி உணர்வப்படி! சிவ வுணர்விற்கு எங்கும் சிவம், இன்பம். நீற்றறையில் எழும் கனல் மாலை மதிபோன்றது. அது வேகும் ஓசை வீணை போன்றது; அதன் வெப்பம் தென்றலும், வசந்தமும், வண்டுகள் பாடும் பொய்கையும் போன்றன. அச்சுகம் எம்பெருமான் திருவடி இன்ப மென்றிருந்தது!

பல்லவன்:—அடா உண்மை சொல்! எம்மிடமிருந்து கற்ற மந்திரத்தினுல் தப்பினுயல்லவா! எந்த மந்திரம் செய்தாய் சொல் உண்மையை!

வாகீசர்:—

நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே!

சதிசேனன்:—மந்திரத்தை உள்ளேஉருப்போட்டு வெளிக்கு எதையோ பிதற்றுகிருன். சாமியை மறந்துவிடு! உடனே திருந்து! இன்றேல்! அரசன் வாளுக்கு இரையவாய்!

வாகீசர்:—

பூக்கை கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாம நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே!

பல்லவன்:—அடே நாங்களும் வழிபாடு செய்பவர்களே! எங்கள் கடவுளுக்கு மலர் தூவுவாயாக!

வாகீசர்:—இறைவன் ஒருவன்; அவன் இன்பமயன்.

நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்ஞர் சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங் கண்டு
நக்கு நிற்ப ரவர்தம்மை நாடியே!

பல்லவன்:—பகைவனே, நினது கடவுள் எத்தகையோன் சொல் பார்ப்போம்.

வாகீசர்:—அன்பர்காள், கேண்மின்!

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே!

ஈசன் தனதருட் சக்தியால் சூரியனின் கதிர்போல் எங்கும் பரவியுள்ளான்; ஒவ்வோருள்ளத்தும் அவனுள்ளான்; விறகில் தீ போலும், பாலில் நெய்போலும், மணியிற் சோதியான் மறைந்துளான். ஆணவம், மாயை கன்மமாகிய அழுக்கால் மூடுண்ட பசுக்கள் அவனை உணர மாட்டார்கள். அன்பினால் அறிவு முற்றி, அவ்வுணர்வால்முயன்று முயன்று தவத்தில் ஓங்கினால் அவன் அருள் வடிவாக முன்னின்று நம்மை யாட்கொள்வான்! அவனே உலகிற் கிறைவன்! அவனே சக்தி! சிவன்! அவனே திருநீலகண்டன்!

பல்லவன்: நீலகண்டனா?

வாகீசர்:—ஆம்! அன்று பாற்கடலிற் கொதித்து எழுந்த வெவ்விடத்தை ஏனையோர் உய்யத்தானே உண்டு கண்டங் கருத்தான்!

பல்லவன்:—ஆனால் அவன் அடியார்களும் விட முண்டால் அவனைப்போலவே பிழைத்திருப்பரோ?

வாகீசர்:—திரு நீலகண்டனை உறுதியாய்நம்பினால் விடமென் செயும்?

சதிசேனன்:—ஆனால் ஒரு வேடிக்கை பார்ப்போம்:

துன்மதி:—மஹாராஜ் காரியம் நடக்கட்டும்.

பல்லவன்:—மல்லர்காள் ஊம் (இரகசியமாய்) இவனுக்கு......
பால் அமுதில் நஞ்சை......ஊம்......தெரியுமா?

மல்லர்:—மஹாராஜா சோற்றிற்கு வஞ்சனையில்லாது பாடு படுகிறோம்.

வாகீசர்:—

நடலை வாழ்வுகோண் டேன்செய்திர் நாணிலீர்
சுடலை சேர்வது சோற்பிர மாணமே
கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னுர்க்கிடந் தூர்முனி பண்டமே.
திருநீலகண்டம்! திருநீலகண்டம்!

துண்டன்:—ஒரே தூக்! தூச்! எமகண்டம்.

[ வாகீசரை வாரிச்செல்கிறன் ]

பல்லவன்:—துன்மதி, இதற்கும் இவன் தப்பினல் என் செய்வதென்ற ஆராய்வோம்!

[ எல்லோரும் செல்லல் ]



# காட்சி அ.

---

[ மல்லர்கள் வாகீசருக்கு நஞ்சமு தளிக்கின்றனர் ]

மல்லர்கள்:—ஐயா பாலுப்சோறும் வெள்ளிக்கிண்ணத்தில்; அடியார் வயிறு முட்ட அள்ளட்டும்.

வாகீசர்:—அன்பர்காள், அறிவேன் சூட்சியை! இதனுல் உம்மை எள்ளளவும் வெறுக்கப்போவதில்லே; இந்தஅடக்கு முறைகளால் எம் பெருமான் அருள் திறத்தை அடக்க உம்மா லாற்ருது! எனது உள்ளமாய் நிற்கும் திரு நீலகண் டனே! காலனேக் கால்கொண் டடித்தவனே! பாற்கடல் விட முண்ட பரமனே! சிவனே! நினது அருளே இதிற் கலங் துண்கின்றேன்! உன் இச்சை அதுவாயின் இவ்வுடல் இவ் விடத்தாற் பிரியினும் பிரிக! இவ்வுயிர் நின்னுயிர். நீ யின் றேல் உயிர்ப்பில்லே! கடல்விடமுண்டவனே, இந்நச்சமுதை நின் பெயரால் நல்லமுதாக்கி உண்கிறேன். நின் பெருமை விளங்குக! சிவம்! சிவம்! சிவம்! நமச்சிவாய! நமச்சிவாய!

[அத்தனேயும் உண்கிருர்]

துண்டன்:—செத்தாய் நீ! அது பொல்லா நஞ்சு. மேலுங் கிழும் பிச்சிக்கும்! மயக்கம் வரும்! தலே சுற்றும்! ஆள் அத் தோடே எமலோகம்.

முண்டன்:—இன்னும் ஒரு விநுடியிலே ஆள் பம்பரஞ் சுற் றிக் கீழே விழுகிருன் பார். மகாராஜாவை அழைத்து வரு வோம்.

[ செல்கின்றனர் ]

வாகீசர்:—அப்பனே! விடமா உண்டேன்! நின்னருள் அமுதமுண்டேன்! ஐந்தெழுத்து அதனை அமுதாக்கியது. சிவானந்தம் சிவானந்தம்! அப்பா தனிமையாயிருக்கிறது. சிவனைப்பாடி ஆடுகின்றேன்!

பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்ப வர்மனம் கோயிலாய்க்கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும் மறந் துய்வனே?

[வருதல்—பல்லவன், துன்மதி, சதிசேனன்.]

பல்லவன்:—இத்தடவை அவன் இறந்தே யிருப்பான்; கொடிய விடமன்றோ! பார்ப்போம்.

(அணுகி நோக்கல்]

என்னே வியப்பு! ஆலமுண்டவன் அயர்ந்து வீழ்வான்! இவன் ஏராளமான விடமுண்டு கூத்தாடுகின்றானே! என்ன ஆச்சரியம்! துன்மதி, அவனைப்பார்!

வாகீசர்:—பனைக்கைமும்மத............

[ பரவசமாக நடமாடல் ]

சதிசேனன்:—எல்லாம் மந்திரம் மஹாராஜ்! இவனை விடக்கூடாது! நாம் யோசித்ததை அடுத்தபடியாகச் செய்வோம்; இவன் மதத்தை மத யானையின் காலில் வைத்து நசுக்குவோம்!

பல்லவன்:—அந்தோ! என் தலை சுழல்கின்றதே! இவனுடைய இரகசியம் புலப்பட வில்லையே! என் செய்வேன்!
சதிசேனன்:—மத யானைக்குத் தப்பமாட்டான். மஹாராஜ்

காலதாமதமானல் மந்திரம் உருவேறி விடும். பிறகு வலிமை பெறுவான். உடனே.........

பல்லவன்:—ஏன் இப்படிக் கூத்தாடுகிருய்! விடம் உன்னை வீழ்த்த வில்லையா?

வாகீசர்:—விடம் அமுதாகி என்னை வாழ்த்திற்று! எல்லாம் திரு நீலகண்டன் செயல்!

போடியார்க்குந் திருமேனிப் புனிதற்குப் புவனங்கள்
முடிவாக்குந் துயர் நீங்க முன்னைவிடம் அமுதானற்
படியார்க்கும் அறிவரிய பசுபதியார் தம்முடைய
அடியார்க்கு நஞ்சமுத மாவததான் அற்புதமோ?

அன்பர்காள்! அடக்கு முறையால் அருட்டிறத்தை வெல்ல முடியாது! சிவனருளைப் பணிமின்! சிவனே, செய்ய நினைப்பைத் தந்து, இவர்கள் நெஞ்சிலுள்ள நஞ்சை விலக்கியருள்!

தாயு மாயெனக் கேதலை கண்ணுமாய்ப்
பேய னேனையும் ஆண்டபெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாயனு ரேன நம்வினை நாசமே!

[ மல்லர் வருதல். ]

துண்டன்:—மஹராஜ் தயார்! சரியான வெறியேற்றி, பெரிய மத யானை குமுறிக் கொண்டிருக்கிறது! சங்கிலியை அவிழ்த்து சூ! என்னு முன்னே ஆள் அப்பளாம்.

துன்மதி:—மஹராஜ் கால தாமதம் வேண்டாம்; இவன் பிழைத்தால் நமக்குப் பெருங் கேடு!

பல்லவன்:—மல்லர்காள்! இம்முறை இவன் பிழைத்தால் உம்மை தண்டிப்பேன்!

மல்லர்:—மஹாராஜா பிழைக்கமாட்டான்! இதோ ஒரே தூக்! தூக்!

[ வாகீசரை வாரிச் செல்கின்றனர். ]

பல்லவன்:—நாம் சென்று அடுத்ததை யோசிப்போம்.

[ எல்லாரும் செல்லல். ]

---

## காட்சி கூ.

---

வாகீசர்:—அச்சத்தாலே ஆருயிர் சாவது! அச்சத்தாலே அடிமை வாழ்வுறுவது! அச்சத்தாலே அல்லல் பிறப்பது. அச்சம் வென்றேன் அனைத்தும் வென்றேன்! அன்று பகைவர் ஏவிய பகட்டையுரித்தோய்! இன்றுன் அடியனைக் கொன்றிட, இவர்கள் வெறிக் களிற்றினை விறிட்டேவினர்! நின்னடியேனுக் கென்னே அச்சம்! நின் அடியாருக்கு இன்னலும் உளதோ! சிவாய நம வெனில் அபாய முளதோ?

[ திரைக்குப்பின்னே பெருங்கூச்சல் கேட்கிறது. யானை வீறிட்டு வெறிகொண்டு வருகிறது. ]

ஆ! இதோ வெறி யானை சிவனே! ஊழி யிடி போலக் குமுறி வருகிறதே!

இடியுற்றெழு மோலியிற்றிசை யிப முட்கிட வடியிற்
படிபுக்கற நெளியப்படர் பவனக்கதி விசையிற்

கடிதுற்றடு செயலிற்கிளர் கடலிற்படு கடையின்
முடிவிற்கன லென முற்சின முடுகிக்கடு கியதே!

[மல்லர்கள் வருதல்]

மல்லர்கள்:— ஹாஹாய்! ஹாய்! ஹா அ அய்! முட்டு, நசுக்கு, தொக்கு, மிதி, நொறுக்கு, தேய், பிசை, கொல்! ஓடு யானை! போ, சலோ!

[யானை வாகீசர் முன்னே நிற்கிறது.]

வாகீசர்:—கருவரைபோல் முன்னிற்கும் கயமே! யான் கரி யுரித்துப் போர்த்தவன் அடியான்! அகந்தை யெனும் மதயானையைப் பிளந்து, அரனுக்கும் ஆருயிர்க்கும் அன்பு பூண்ட அன்பன். இதோ யான் உன் முன் நிற்கின்றேன். உன்னைக் கரிமுகனாக எண்ணி அன்பு பேணுகின்றேன்? இவ்வுடலை நீ நசுக்கினும், ஈசன் கழலடியில் இன்புறும் ஆன்மாவை நீ நசுக்கொணாது! சிவங்கண்டோர் சவத்திற்கஞ்சார்; ஆதலின், உன்னிடமும் அத்துவித உறவு கொண்டுள்ள சிவ பெருமான் சித்தம் நடக்கட்டும். வெறி மத யானையே, யான் உனக்கு அஞ்சாது இதோ நிற்கிறேன். இதோ என் சித்தத்தை எம் பெருமான் சிந்தனையில் வைத்து நிற்கிறேன்.

சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட்
[சூளாமணியும்
வண்ண வுரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ண லரண்முர ணேறு மகலம் வளாய வரவும்
திண்ணென் கெடிலப் புனலும் உடையா ரொருவர்
[தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை! அஞ்சவருவது மில்லை!

வாவா! கணபதிக் களிறே வாவா—சிவ சிவ! சிவ சிவ!

நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல்லாங்கொண் டெடுத்தான்
ஒன்பதுமோன்று மலற
வரங்கள் கொடுத்தருள் செய்வான்
வளர்பொழில் வீரட்டஞ்சூழ்ந்து,
நிரம்புகெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்றுமில்லை! அஞ்ச வருவது மில்லை!

வாவா! களிறே! மனப்படி செய்; இதோ வீற்றிருக்கின்றேன்.

[ யானை திகைத்து நின்று வாகீசரை வலம் வந்து பணிகிறது ]

மல்லர்:—அடா இதென்னடா! இங்கே வெறி பிடித்து வீறிட்ட மதயானை பாரடா! பசுப்போலே அவர் முன்னே நின்று வணங்குகிறது! தும்பிக்கையாலே தடவுது! அதோ பாரடா அதைத் தடவிக் கொடுக்கிறான்.

துண்டன்:—அடே மந்திரம் போடுறாண்டா! யானையை மயக்கி விட்டான்! அடா செத்தோம்! யானை இதோ வீறிட்டு நம்மேல் வருகிறதடா!

[யானை வீறிட்டு வெஞ்சினத்துடன் மல்லர் மீது வருதல்.
அரங்கைச் சுற்றிச்சுற்றிமக்கள் அலறி ஓடிவருதல்.]

முண்டன்:—அந்தோ செத்தோம்! யானையை நம்மேல் ஏவி விட்டான்! அது ஜனங்களைத் தாக்கி மிதித்துக் கொன்று நகரை நாச மாக்குகிறதே! ஆத்தா ஆ! ஆ! ஐயையோ!

[ திரை விழுதல் ]

---

## காட்சி கய.

---

[பல்லவராஜன் சதிசேனன், துன்மதி மூவரும் சூழ்கின்றனர்.]

பல்லவன்:—துன்மதி - மதயானைக்கும் தப்புவானே?

துன்மதி:—தப்பினாலும் தப்பலாம்!

பல்லவன்:—இன்றேல் யானை அவனைக் கொன்றிருக்குமோ?

துன்மதி:—இருந்தாலும் இருக்கலாம்.

பல்லவன்:—இதற்குந் தப்பினால்அவனைஎன்ன செய்யலாம்?

துன்மதி:—மஹாராஜா சித்தம்போலச் செய்யலாம்.

பல்லவன்:—ஆற்றில் தூக்கிப் போட்டு விடலாமா?

துன்மதி:—அப்படியே செய்யலாம்.

பல்லவன்:—நீந்தி வந்து விடுவானே?

துன்மதி:—அப்படியும் செய்வான். வலுத்த பேர்வழி!

சதிசேனன்:—கல்லைக் கட்டிப் போட்டால்......

பல்லவன்:—இந்த யோசனை எப்படி?

துன்மதி:—அதுவே சரி.

பல்லவன்:—ஆறு ஆழமில்லாவிடில் கல்லை ஊன்றி அதன் மீது நிற்பானே?

துன்மதி:—அதுவும் செய்வான் தந்திரக்காரன்!

பல்லவன்:—பிறகு என்ன செய்யலாம்! அந்தோ! எனது சூட்சியெல்லாம் வீணுயிற்றே! என் மனம் சுழல்கிறது!

சதிசேனன்:—மஹாராஜா, ஒரே முடிவு! பெருத்த கல்லைக் கட்டி நடுக்கடலிற் கொண்டுபோய்ப் போட்டு விடுவோம் அமிழ்ந்துபோவான்.

பல்லவன்:—துன்மதி, இந்த சூட்சி எப்படி?

துன்மதி:—அது மெத்தச் சரி; இதற்கு மிஞ்சியதில்லை.

பல்லவன்:—அதற்கும் தப்புவானே?

துன்மதி:—தப்பினுலுந் தப்பலாம்.

பல்லவன்:—ஏன்?

துன்மதி:— மந்திரங்கற்ற மாயக்காரன்!

சதிசேனன்:—மஹாராஜா ஐயம் வேண்டாம்; சங்கிலியால் கட்டி இறுக்கி விடுவோம்.

[ திரைக்குப்பின்னே பெருங் கூச்சல் ]

ஐயையோ செத்தோம், ஊர் அல்லோல கல்லோலப்படுகிறது! ஐயையோ!

பல்லவன்:—அதென்ன! குடிகள் முறையிடுகின்றனர்? பெருத்த அபாயம் நேர்ந்ததோ!

[ திரைத் திரை மல்லர் விரைந்து வரல் ]

மல்லர்:—ஐயோ! மஹாஹஹ ராசா! போச்சுது! எங் ஹ்ஹ கள் உ ஹா ஹா யிர்! ஊ ஹா ஹார் பிழைக்காது!

[ கீழே விழுகின்றனர் ]

பல்லவன்:—என்ன நேர்ந்தது? சற்றுஇளைப்பாறிச் சொல் லுங்கள்.

மல்லர்:—(எழுந்து) ஆ! ஹ! ஹ அம்மா! ஆத்தா! மூச்சுத் திணறுதே! அப்பா!

துண்டன்:—மஹாராஜா யானை அவனைக்கும்பிட்டது! ஏதோ மந்திரம்போட்டான்! உடனே எங்கள்மேல் திரும்பி வெறி கொண்டு வீறிட்டுப் பாய்ந்து, சனங்களைத் துவைத்து மிதி த்து முட்டிக்கொன்று அட்டூழியஞ் செய்கிறது! செத்துப் பிழைத்துப் பத்து மைல் ஓடித் தப்பிக்கொண்டு வந்தோம். மஹாராஜா! பலே மந்திரக்காரன், மாயக்காரன்!

பல்லவன்:—இதென்ன அதிசயமாயிருக்கிறது! இம் மாயா வியை இனி அரைக்கணமும் உயிருடன் வைக்கொணாது. மல்லர்காள்! நமக்கு இவ்வளவு தீங்கு புரிந்த அம் மாயக்கார னைப் படகிற் கொண்டு சென்று பெரிய கல்லை இறுகக் கட் டிக் கடலில் ஆழ்த்தி விடுங்கள்!

மல்லர்:—உத்திரவு! மஹாராஜா இனி அவனை விடமாட் டோம்! ஒரே தூக்! கடலில் அமுக்! அமுக்! அமுக்!

[ செல்கின்றனர் ]

பல்லவன்:— நாம் சென்று மத யானையை அடக்குவோம்.

[அனைவரும் செல்லல்]

## காட்சி கக.

[ வாகீசர் கடலில் மிதத்தல் ]

*நமச்சிவாய! நமச்சிவாய!*

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத்திருந்தடி பொருந்திக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சிவாயவே!

*நமச்சிவாய! நமச்சிவாய! அலைகடலினும் விரிந்த அருட் கடலே! எங்குந் துணை நிற்கும், எல்லாம் வல்ல சித்தே! சிவனே! அடியாரிடம் நினக்கு எத்துணை அன்பு! எளியேனைக் கடலில் ஆழ்த்த இவர்கள் கட்டிய கல்லும் தெப்பமானதே! ஆர்கலி என்னைச் சுற்றிச் சிவ சிவ வென்றிசைத்து நடம் புரிகின்றதே! நினதருள் வெள்ளத்தில் நின்றுணையே புணையாய் மிதக்கின்றேன்! சிவபிரானே நின் நாமமே நாவினுக் கணி!*

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கலம் அரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலம் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே!

*நினது ஐந் தெழுத்தின் பெருமையை ஓதப்படுமோ!*

இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது! நமச்சி வாயவே!

நமச்சிவாய, நமச்சிவாய! நின் இச்சை எங்கு இதைக் கொண்டு செல்கிறதோ அங்கு செல்லட்டும்! நின் அகண்ட அருளின் மடிமீது அன்புக் குழந்தையாக தியான நித்திரை செய்கின்றேன். நீயே புணை! நீயே துறை! நின் செயல் நடக்கட்டும்!

( திரை விழுதல் )

---

## காட்சி கஉ.

---

[ திருப்பாதிரிப்புலியூர்க் கடற்கரை. அன்பர் குழாம் சிவ நாமம் ஆர்க்கின்றனர். சிவநேசன், சிவபாதன் முதலிய தொண்டர் குழுமி யுள்ளனர் ]

சிவநேசன்:—ஆ அக்கொடியன் அடியாரை அளவற்ற தீமை செய்து முடிவிற் கல்லைக் கட்டிக் கடலில் ஆழ்த்தினன்! இதோ கல்லும் தெப்பமாகி வாகீசர் கரை சேருகின்றார்.

சிவபாதன்:—என்னே சிவ மகிமை! அடியார் பெருமை! வாகீசரின் அன்புத் திறம்! கல்லும் தெப்பமானதே!

சிவநேசன்:—இறைவனுக் கரியதெது?

இருவினைப் பாசமும் மலக்க லார்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்க ளேறிட
அருளுமெய் ஐஞ்செழுத் தரசை யிக்கடல்
ஒருகல்மே லேற்றிடல் உரைக்க வேண்டுமோ?

இதோ வந்துவிட்டார் வாகீசர்! அடியார்களே! வாகீசரை வாழ்த்துமின்! சிவநாமம் பாடுமின்!

எல்லாரும்:—வாகிசர் நீடூழி வாழ்க! சிவன் செயல் வெல்க!

பகைவர் இன்னலைப் பரிவால் வென்றோய்! அழிவோர் அழி செயல் அன்பால் வென்றோய்! நீற்றறை அரனடி நிழலெனக் கொண்டோய்! நஞ்சையும் சிவன் தரும் அமுதென நயந்தோய்! ஞானியே நினக்கு யானையும் அடிமை! ஐந்தெழுத்தாலே அலைகடல் கடந்தோய்! வாழ்க, வாழ்க வாகீச வாழ்க!

அடியார்களே, மாப்பெருஞ் சிவத் தொண்டருக்குப் புத்துடை அணிமின்! நீறு பூசுமின்! அன்பின் அணைமின்! ஆனந்தக் கூத்தாடுமின்! நமச்சிவாய! நமச்சிவாய!

(அன்பர் வாகீசருக்கு அணிசூட்டல்]

வாகீசர்:—சிவமயம்! சிவமயம்!

மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும்
விண்பால் திசைகெட் டிருசுடர் வீழினும் அஞ்ச னெஞ்சே
திண்பால் நமக்கொன்றுகண்டோம் திருப்பாதிரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழ லிணையே!
நமச்சிவாய! நமச்சிவாய!

அடியார்கள்:—திருச்சிற்றம்பலம்! நமப்பார்வதீ பதயே.

அனைவரும்:—ஹர ஹர மஹாதேவ!

சிவநேசன்:—சிவானந்த வெற்றிச் செல்வரே! இனித் தோன்றாத்துணை நாதரை தரிசிக்கச் செல்வோம்! அடியார்கள் தமிழ் வேதம் முழக்குமின்!

வாகீசர்:—சொற்றுணை வேதியன் சோதி வானவன்.

எல்லோரும்:—சொற்றுணை வேதியன் சோதிவானவன்.

வாகீசர்:—பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கை தொழ

எல்லாரும்:—பொற்றுணைத் திருந்தடி பொருந்தக்கைதொழ

வாகீசர்:—கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்

எல்லாரும்:—கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்

வாகீசர்:—நற்றுணையாவது நமச்சிவாயவே!

[இம்மாதிரியே நமச்சிவாயப் பதிகத்தை முழுதும் பாடி அன்பர்குழாம் வாகீசரை நடத்திச் செல்கின்றனர்]

---

## காட்சி கரு.

---

[தோன்றுத் துணைநாதர் சந்நிதி. தமிழ் மந்திரத்தாலேயே. பூசனை நடக்கிறது.]

எல்லாரும்:—

மூவா நான்மறை முதல்வா போற்றி!
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி!
ஆவா வென்றனுக் கருளாய் போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி!
இடரைக் களையும் எந்தாய் போற்றி!
ஈச போற்றி! யிறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி!

அரைசே போற்றி அமுதே போற்றி!
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேத போற்றி! விமலா போற்றி!
ஆதி போற்றி! அறிவே போற்றி
உடையாய் போற்றி உணர்வே போற்றி!
கடையேன் அடிமை கண்டாய்போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி!
சைவா போற்றி! தலைவா போற்றி!

தோழா போற்றி துணைவா போற்றி!
வாழ்வே போற்றி வைப்பே போற்றி!
உரையுணர் விறந்த ஒருவ போற்றி!
விரிகடல் உலகின் விளைவே போற்றி!
தென்னா டுடைய சிவனே போற்றி!
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி!
புரம்பல வெரித்த புராண போற்றி!
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி!

போற்றி! போற்றி! புயங்கப்பெருமான்
போற்றி! போற்றி! புராண காரண!
போற்றி! போற்றி! சய சய போற்றி!

*தீபாராதனை நடக்கிறது*

அன்பர்:—

நமச்சிவாய வாழ்க! நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும்என்னெஞ்சினீங்காதான்தாள் [வாழ்க!
ஏகன் அநேகன் இறைவ னடிவாழ்க!
வேகங்கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க!
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே;

ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய்!
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின் தொழும்பில்
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே!
தேசனே தேனார் அமுதே சிவபுரனே!
அச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலு மீர்த்தாட் கொள்வோன் வாழ்க!
சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க!
எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க!

[ நிவேதனம் செய்தல் ]

எல்லாரும்:—

எல்லா முன்றன் இச்சைக் காகுக!
எல்லாம் வல்லோய் எல்லாம் படைத்தோய்!
உண்பது முனதே உடுப்பது முனதே!
ஆவியு முடலும் ஆகுக வுனக்கே
தேவ தேவா! சிவபெரு மானே!
அடியார்க்கமுதே அருட்பெருஞ்சோதி
வடிவே போற்றியெம் வாழ்வே போற்றி!

[முதலில் வாகீசருக்கு விபூதியீந்து பிறகு மற்றவருக்கு அளித்தல்]

அன்பர்:—சிவன்செயல் வெல்க! வாகிசர் நீடூழி வாழ்க! சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ!

[ எல்லோரும் சிவநாமம் முழக்கல் ]

சிவநேசன்:—திருவருட் பெரியோய்! நாவிற் கரசே! நன்னெறி விளக்கே! அக்கொடியர் துயர்களை எப்படிப் பொறுத்தீர்! சிவ நேயம் நைந்துருகும் உள்ளமும், அருளும் அன்பும் நிறைந்த இத் திருக்கோலம் நீற்றறையிலும் வெறி வேழத்தின் முன்னும், கடலிலும் எப்படி அஞ்சாது நின்

றது! பெரியோய் போற்றி! அரியோய் போற்றி! சிவனடி யன்றி வேறு அறியாய் போற்றி!

வாகீசர்:—அன்பர்காள்! எல்லாம் சிவன் செயல்! அவனன்றே தனது சக்தியின்மூலம் எங்கும்தோன்ருத் துணையாய் அன்பர் பக்கமுள்ளான்! ஆணவம் மறந்து, பேணுக சிவனை! உடையானுக்கே உடைமை யாக்கி, அன்பினிற் கலப்பது நங்கடன் ஒன்றே! மற்றதெல்லாம் சிற்றம்பலன் செயல்.

ஈன்ருளுமா யெனக் கெந்தையுமாய் உடன் தோன்றினராய்
மூன்ரு யுலகம் படைத் துகந்தான் மனத்துள் ளிருக்க
ஏன்ருன் இமையவர்க் கன்பன் திருப்பா திரிப்புலியூர்
தோன்ருத் துணையாய் இருந்தனன் தன்னடி யோங்க ளுக்கே!

நமச்சிவாய, நமச்சிவாய, நமச்சிவாய,

கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையான்
உருவாய்த் தெரிந்துன்ற னுமம் பயின்றேன் உனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீ பாதிரிப்புலியூர் அரனே!
புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி யென் மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டு மிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள்செய் பாதிரிப் புலியூர்ச்
செழுநீர்ப் புனற் கங்கைச் செஞ்சடை மேல்வைத்த
[ தீ வண்ணனே!

எல்லாரும்:—திருச்சிற்றம்பலம்!

[கோயில் பூசகர் வாகீசருக்குத் திருமாலை யணிதல்]

எல்லாரும்:— சிவம் வாழ்க! சைவம் வாழ்க! சிவகணம் வாழ்க! சிவனடியார் வாழ்க! சிவசக்தி வெல்க! சிவனருள்

பரவுக! சிவச் சுடர் ஒளிர்க! வையம் ஓங்குக! வானம் பொழிக! எங்கும் இன்பம் பொங்குக! நமச்சிவாய வாழ்க! நாதன்றாள் வாழ்க!

வாகீசர்:—அன்பர்காள், இனியாம் திரு வீரட்டானஞ் செல்ல விடைதருவீர்.

சித்தத் துருகிச் சிவனெம்பிரானென்று சிந்தை யுள்ளே
பித்துப் பெருகப் பிதற்றுகின்றார் பிணிதீர்த் தருள்வாய்!
மத்தத் தரக்கன் இருபது தோளு முடியு மெல்லாம்
பத்துற் றறநெரித்தாய் யெம்மை யாளும் பசுபதியே!
நமச்சிவாய! நமச்சிவாய!

---

## காட்சி கச.

---

[பல்லவராஜன் பரிவு.]

பல்லவன்:—கல்லும் தெப்பமாகித் திருப்பாதிரிப்புலியூர் சேர்ந்து பல்லாயிரம் அன்பரால் போற்றிப் புகழப் பெற்றார் வாசீகர்! சீ-என்ன மதியீனமான கொடுமைபுரிந்தோம்! இதனால் நமக்குற்றது என்ன? உலகில் மாறாப்பழியும் தோல்வியும், மனப்புண்ணுமே! அந்தோ! இப்போது அறிவு வந்தது! வாகிசா, வாகிசா, என்னை மன்னிக்கவேண்டும்! நினது ஆன்ம சக்தியை நன்குணர்ந்தேன்! எனது சிறுமையும் கொடுமையும் பழியும் என்னையே வாள்கொண் டறுக்கின்றன. அலைகளை நிலைபெறச்செய்யினும் ஒரு ஆத்மசித்தனை அடக்குமுறை வெல்ல முடியுமா? அந்தோ! உணர்வு வந்

தது! உலகை ஆளும் ஒரு பராசக்தி உண்டு உண்டு! ஒரு சக்தி நாதன் உள்ளான் உள்ளான்! கடவுளே என் விழியைத் திறந்தாய்! எங்குமிருந்து அனைத்தையும் அருளாளும் முதல்வா! இதோ நின் திருவடிக்கு யான் அடியேனுகி இனியேனும் புனிதமுறுகின்றேன்! அந்தோ! அவமே கழித்தேன். துன்மதியே போ, போ! சதிசேனு செல் செல் செல்!

கொலைசெய்தேன், வீண்! வீண்! வாழ்வைக் கொலை செய்தேன் என்னை மன்னிப்பாய்!

குலம்பொல்லேன் குணம் பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோலமாய
நலம் பொல்லேன் நான் பொல்லேன் ஞானி யல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன். நடுவே நின்ற
விலங் கல்லேன்; விலங் கல்லா தொழிந்தே னல்லேன்
வெறுப்பனவு மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம் பொல்லேன் இரப்பதே யீயமாட்டேன்
என் செய்வான் தோன்றினேன் ஏழையேனே!

[செல்கிறுன்.]

துன்மதி:—சி! என்ன நமது வாழ்வு! நல்லோரைப் பொல்லாங்கால் நலிக்கப்பார்த்து வீண் பழி சுமந்தேன்! யானும் வாகிசர் பாதத்தில் விழுந்து திருந்துகிறேன்.

[செல்கிறுன்]

சதிசேனன், அதிகாயன்:—அந்தோ நமது சூட்சிகள் மண்ணுபின! செய்தது பாதகம்! வந்தது பழி! யாரைக் கொடுமை செய்தோமோ அவர் உலகு போற்ற வென்றுர்! இறைவன் அடியாரை நாமும் சென்றடைவோம்.

[செல்கிறுன்]

[ குண்டன் முண்டன் வருதல். ]

முண்டன்:—அப்பாண்டே! அவர் தெய்வந்தாண்டா! சத்தியமாத் துணியைப்போட்டுத் தாண்டறேன்.

குண்டன்:—ஆமாண்டா! இந்தப் பாழும் மகாராசாக்களுக்கு என்னவேலே! இந்த வவுத்துக்காக இவங்க செய்யும் பழியெல்லாம் நம்ம தலையிலே வெடியுது! பாவம்! அவரை எப்படியெல்லாம் கொலேசெய்யப் பார்த்தோம் - அவர் தெய்வந்தாண்டா!

முண்டன்:—இல்லாட்டி உங்கள்பாட்டன் நாளிலேயும் கல்லு தெப்பக்கட்டைமாதிரி மிதந்ததைக் கேட்டிருக்கிறயா?

குண்டன்:—ஆமாங்கிறேனே! மகாராசாவுக்கு இப்போது தான் புத்திவந்தது! சாமி உண்டு என்று நம்பிக்கைவந்தது. பாவம் அந்தப் புண்ணியத் தெய்வம்—நாமும் அவர்காலிலே விழுந்து சாவமடா!

முண்டன்:—(கன்னத்திற் போட்டுக் கொண்டு) மன்னிக்கணும், மன்னிக்கணும் தெய்வமே! அவராதம் செஞ்சிட்டோம்! வவுத்துக் கொடுமைக்காக இந்தப் பாழும் எசமாங்களேக் கட்டி அழுகிறோம். இவர்களுக்கு நல்ல புத்தி கொடு. தெய்வமே! இதோ உன் காலில் விழுகிறோம்.

மாடக்கருப்பண்ணனே மாமுண்டியோ
மயிலேறும் வேலவனே சாமுண்டனே
ஆடும் அழகண்ணனே சாமியாண்டே
அபராதம் பொறுத்தெம்மை யாண்டுகோள்வாய்!

[செல்கின்றனர்]

# காட்சி கரு.

[வீரட்டானேசுரர் சந்நிதி - தேவாரம் முழங்குகிறது.
வாகீசர் அடியார் சூழ விளங்குகிறார்]

அன்பர்கள்:—

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்!
இல்லையே யென்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்!
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில் சூழ் குன்றையார் விறன் மீண்டாற்
[கடியேன்
அல்லிமேன் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே!

[சந்நிதியில் தீபாராதனை நடக்கிறது.]

வாகீசர்:— சிவ சிவ சிவ சிவ சிவ சிவ!

[அனைவரும் சிவநாமம் உச்சரிக்கின்றனர்]

[தீப வழிபாட்டு மந்திரம்]

அன்பர்:—

ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே!
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே!
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக்குன்றே!
சித்தத்துள் தித்திக்குந் தேனே!
அளிவளர் உள்ளத் தானந்தக்கனியே
அம்பலம் ஆடரங் காக

வெளிவளர் தெய்வக் கூத்துகந்தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே!

அப்பர்:—

வெறிவிரவு கூவிளநற் றேங்கலானை,
வீரட்டத் தானைவெள் ளேற்றினானைப்
பொறியரவி னானைப் புள்ளூர்தியானைப்
பொன்னிறத்தி னானைப் புகழ்தக்கானை
அறிதற் கரியசீர் அம்மான்றன்னை
அதியரைய மங்கை அமர்ந்தான் றன்னை
யெறிகெடிலத்தானை யிறைவன் றன்னை
யேழையேன் யான்பண் டிகழ்ந்தவாறே.

சிவநேசச் செல்வர்காள்! அருட் பெருமையும் ஐந் தெழுத்தின் மகிமையும் சிவனடியார் சிறப்பும், சிவப்பணி யின் மேன்மையும் இன்று விளக்கிய இறைவன் திருவருளை யிறைஞ்சுவாம்! அரனுக்கு அன்புசூழுமின்! யாவர்க்கும் அன்பு செய்மின்! எச்சமயத்திற்கும் இறைவன் பொது. அவன் அருளின்றி எதுவும் இல்லை. எல்லாம் அவன் பெருமை. எல்லாம் அவன் கருணை! சிவநெறிச் செல்வர் காள்! உங்கள் உள்ளத்தில் சிவனை அன்பால் வழிபடுமின்!

தானே தானுன தற்பரனின் சிற்பர விளக்கமே அனைத்தும். தனது ஆணைத்திறத்தால் போக்குவர வளித்துப் பக்குவப் படுத்தி அறிவு மலர்ச்சியால் அவன்பாலில் வெண் ணெய்போல் விளங்குவான்! ஆணவத்திற் புதைந்த மனி தன் ஊனக் கண்ணால் அவனை எப்படி அறிய முடியும்? அன்பு அறிவால் உள்ளத்தில் அவன் அருளைத் தேடுக. நம்பு, நினைமுயல், நாடொருமை; ஞானமாம் இன்பம் பழுக் கும் இனிது. எங்குங் கோயில் கொண்டிலகும் ஏகனுகும்

இறை வழி பற்றுமின்! அடியார் குழுவில் அன்புடன் சேர்மின்! இறைவனருளை யெண்ணி யுருகுமின்; சமயங்கள் எத்தனையோ அத்தனையும் தன்னுள் அடக்கிய சமயாதீதப் பழம் பொருளைத் தலைக் கொண்ட சைவ நெறியையும் கடவுள் மணங்கமழும் தமிழ் மறைகளையும் எங்கும் பரப்புதற் கெழுமின்! அவற்றைப் பயின்று நின்று பயன் பெற்றுய்மின்! அவை கண்ட பேரின்ப வழியே பாரின்ப வழி. பாரனைத்தும் பரவுக சிவனருள்!

பற்றி நின்ற பாவங்கள் பாற்ற வேண்டிற்
பரகதிக்குச் செல்வதோரு பரிசு வேண்டில்
சுற்றி நின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டிற்
சொல்லுவேன் கேள்நெஞ்சே அஞ்சா வண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே யென்றும்
உன்னையல்லால் ஒரு தெய்வம் உள்கே னென்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதாவென்றும்
பொழிலாரு ராவென்றே போற்று நில்லே!

எல்லாரும்:—திருச்சிற்றம்பலம்! போற்றி போற்றி சிவனே போற்றி!

[பல்லவராஜன் வருதல்.]

பல்லவன்:—

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர் பிறந்தார்க ளெல்லார்க்கும் அடியேன்.

[பல்லவன் அழுதுகொண்டே]

திருநின்ற செம்மையே செம்மையாய்க் கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்,

[வாகீசர் காலில் விழுதல்.]

பெரியோய், அரியோய்! சிவனருட் குரியோய்! சிறியேன பெரும் பிழை பொருத்தருள்க! என் தெய்வமே! இறைவன் ஒருவன் உள்ளான்! அவன் அருள் அடியார்க்குத் துணை புரிகிறது! சிவப் பொருள் உண்மை! சிவ சத்தி எல்லாம் வல்லது! எனக்கு உணர்வூட்டிய பரமகுருவே! நாயினும் கேடனான இக்கொடிய புல்லனை ஆட்கொள்ளுக! நாவிற்கரசே! நலத்திற்கரசே! பொருமைக்கரசே! உண்மைக்கரசே! பொல்லா வினையேன், கொல்கொலைக் கஞ்சேன். சதியும், துன்மதியும் என்னை மயக்கி நினக்கிழைத்த தீமைகள் சிறிதோ? எம்பெருமானை தமக்குச் செய்த கொடுவினைகள் என்னையே சுடுகின்றன! தீவினையாளரைச் செய்வினை வாட்டும்! அந்தோ! நீற்றறையிலிட்டாற்போல் என்னுடல் எரிகின்றதே! நெஞ்சு நஞ்சுண்டு பதைக்கிறதே! இறைவனருட் பெருக்கே! தங்களை இடரவிட்ட யானை எனது நலத்தை யெல்லாம் வெறிகொண்டு நசுக்கியதே! கவலைக்கல் என் மனத்தைக்கட்டி மீளாத் துயர்க்கடலில் ஆழ்த்தியதே! அப்பனே, என்னையே யான் சுட்டுக்கொள்கிறேன்! ஐயனே அரன் பெருமையும், அடியார்பொறுமையின் பெருமையும், அன்பின் மாண்பும் அருட்டிறத்தின் அருந்திறனும் விளங்கின, விளங்கின, நன்கு விளங்கின! தவ சக்தியே சக்தி! ஆற்றல் பொறையளவே யாகும். சிவனருளே வெல்லும்! அடக்குமுறை அவலப்படும்! கொடுங்கோல் குலையும்! சிவனருட் செங்கோல் செகமெலாம் புரக்கும். சிவனடி பிரியாச் சிறப்புடையரசே! தங்கள் திரு

மலரடிகளை எனது அன்புக் கண்ணீரால் கழுவுகின்றேன்! மன்னித்திடுக, மன்னித்திடுக! வாக்கின் மன்னு! சிறியேன் பிழைகளை மன்னித்திடுக. நமச்சிவாய நமச்சிவாய சிவ சிவ சிவ சிவ!

[துன்மதி, சதிசேனன் வருதல்]

துன்மதி:—பெரும் பெரும் பெரியோய்! எங்கள் மடமையை அறிந்தோம்! அடியார் பெருமை உணர்ந்தோம்! இறைவன் உள்ளான்! ஒன்றே குலமும் ஒருவனே தெய்வமும். எங்கள் அற்பத்தனத்தை, அளவறு கொடுமையை மன்னித்திடுக! சிவ சிவ சிவ சிவ!

[வருதல் முண்டன், குண்டன்]

இருவரும்:—எஞ்சாமீ—சாமீ சாமீ சாமீ! தெண்டம், தெண்டம்! ஆவாவாவாவாவா: (வாயில் அடித்துக்கொள்ளல்) கன்னத்திலே போட்டுக்கிறோம். காலிலே முட்டிக்கிறோம். இந்தப் பாழும் எசமாங்களை நப்பிப் பாவம்— எந் தெய்வமே—தங்களை எவ்வளவு இமிசை செய்தோம்! எங்களை ஒரே தூக்—கடலில் போட்டுவிடுங்கள்! அப்பாடீ எவ்வளவு கொடுமை செய்தோம்—எஞ்சாமீ சாமீ, சாமீ! எல்லாம் பொறுக்கணும் எங்களை மன்னிக்கணும்......இந்தப் பாழும் ராசாக்கள் ஒழியவேணும். நாக்கு ராசா—தாங்களே உலக ராசா! சிவராச்சியம் வரவேணும் தெய்வமே!

வாகீசர்:—அன்பர்காள்! எழுந்து சிவனைப் பணியுங்கள்! தங்கள் மீது அப்போது இரக்கம், இப்போது அளவற்ற அன்பு பிறந்தது. எல்லாம் நலம்! பல்லவர் கோனே! கடவுள் உண்டா?

பல்லவன்:—ஆம் கடவுள் உண்டு.

வாகீசர்:—உள்ளன்பருக்கு அவனே உறு துணையா?

பல்லவன்:—ஆம் ஆம்! உள்ளன்பர் உள்ளத்தும் செயலிலும் அவனே உள்ளான்!

வாகீசர்:—அவன் அருளாட்சி அரசாட்சியின் மிக்கதா!

பல்லவன்:—ஆம் அருளாட்சி வலிது! அகந்தை அரசாட்சி மெலிது!

வாகீசர்:—அவனை நம்பும் அன்பர் உய்வரா!

பல்லவன்:—ஆம். அவன் அன்பரே உய்வர் வெல்வர் புரப்பர் தழைப்பர்!

வாகீசர்:—சிவனருள் பெற்றார் அவனியிற் சிறந்தார்! அவனடி யுடையார் அஞ்சார், தளரார்! அவனருள் பெற்றால் அனைத்துமாகும், என்பது தெளிந்ததா?

பல்லவன்:—அருளேவெல்லும்; அருளொளியை இருளகந்தை வெல்லாது! அடியார்க்கு அச்சமில்லை. அனைத்து மறிந்தேன். அரசே நின் சேவகம் செய்ய என்னை யாட்கொள்ளுக! சிவனை நம்பினேன்! சிவப்பணி புரிவேன்! குணதரவீச்சுரத்தில் திருப்பணி தொடர்வேன்; அருள்க!

வாகீசர்:—எல்லாம் சிவன் செயல். சிவனைப் பணிந்து சிவனுக்கே வாழ்வை அளிப்பாயாக! அன்பர்காள் நீவிரும் புனித முற்றீர் இதோ அன்பிற்கும், ஒளிக்கும் அறிகுறியான இச் சிவ சின்ன மணிந்து சிவனைப்பணிந்து தொண்டு புரிமின்.

பல்லவன்:—

நாத்திகப் பிசாசமே செல்! செல்! செல்!
ஞானவான் ப்ரகாசமே வேல்! வேல்! வேல்!

வார்த்தையாடம் வாதமே செல்! செல்! செல்!
வாய்மையான நீதியே வேல்! வேல்! வேல்!
ஆத்திரக்கோடரமே செல்! செல்! செல்!
அமைதியின்ப வீரமே வேல்! வேல்! வேல்!
நாய்ச்சின அகந்தையே செல்! செல்! செல்!
நல்லடியார் சிந்தையே வேல்! வேல்! வேல்!

வாகீசர்:—

அத்தாவுன் னடியேனை அன்பா லார்த்தாய்
அருளுேக்கிற் றீர்த்த நீ ராட்டிக்கொண்டாய்
எத்தனையும் அரிய நீ யெளியை யானுய்
எனையாண்டு கொண்டிரங்கி யேன்றுகொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயேனுனேன்
பிழைத்தனங்க ளெத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையு மெம்பரமோ ஐய ஐயோ
எம்பெருமான்திருக்கருணை யிருந்தவாறே!

காட்சி முடிவு.



# வாகீச விஜயம்

## இரண்டாம் பாகம்.

---

### நாடக பாத்திரங்கள்.

---

1 திருநாவுக்கரசர்

2 திருஞான சம்பந்தர்

3 அப்பூதியடிகள்-அவர் மனைவி, இருமைந்தர்

4 திருநீலகண்ட யாழ்ப்பாணர்

5 சிவநேசன்

6 சிவபாதம்

7 கோயில் அர்ச்சகர்

8 சிவமுனிவர்

9 அன்பர் குழாம்

10 அரம்பையர்

---

## காட்சி கசு.

---

[தில்லைச் சிற்றம்பலத்தில் அன்பர்குழாம்]

அன்பர்:—

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தன்எனக் கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே!

[சிவநேசன் வருதல்.]

சிவநேசன்:— அடியார்களே, திருநாவுக்கரசு நாயனர் தில்லை சேர்ந்தார்! இதோ அம்பலக் கூத்தன் திருச் சந்நிதிக்கு வந்துகொண்டிருக்கிறர்.

எல்லோரும்:— அப்படியா! வாகீசப் பெருமான் வாழ்க! சிவன் அருள் வெல்க! அடியார் காட்சி அரனர் காட்சி! வழியில் ஏதேனும் அருள் விளக்க மாயிற்ரே?

சிவநேசன்:— அடியார் செல்லுமிடம் அருள் விளக்கமே. திருவெண்ணெய் நல்லூர், திருவாமாத்தூர், திருக்கோவலூர், முதலிய தலங்கள் புக்குப் பெண்ணடகத்தில் திருத் தூங்கானை மாடம் ஆலயத்தில் அடிகள்,

பொன்னர் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் [போற்றி செய்யும்
என்னுவி காப்பதற் கிச்சையுண்டேல் இருங்கூற் றகல
மின்னரு மூவிலைச் சூலமென்மேற் பொறி மேவு [கொண்டல்
துன்னர் கடந்தையுள் தூங்கானைமாடச் சுடர்க்கொழுந்தே

எனப் பாடவே சிவபெருமான் அருளால் ஒரு சிவ பூதம் பிறர் காணாது வந்து வாகீசர் தோளிலே சூலக்குறி, காளைக் குறியைப் பொறித்தது! பிறகு பல தலங்களைக் கண்டு வாகீசர் இப்போது தில்லை வந்துளார்.

[திரைக்குப் பின்னல் அன்பர் குழாம்]

நடராஜா, நடராஜா, நர்த்தன சுந்தர நடராஜா!

சிவநேசன்:—இதோ அடியார் குழாம் புடை சூழ சிவ முழக்கத்துடன் வாக்கரசர் வருகிறார்.

[வாகீசர் வருதல்.]

அனைவரும்:— வாகீசர் வாழ்க! தமிழ் மறை வாழ்க! சிவ நெறி வாழ்க! திருச்சிற்றமபலம்!

வாகீசர்:—[நடராஜர் சந்நிதி வருதல். தீபாராதனை]

அருட்பெருஞ் சோதி போற்றி! அன்பருள் ளமூதே போற்றி!
திருச்சிற்றம்பலத்துளாடும் செல்வனே சிவனே போற்றி!
பொருட்செறி வடிவே போற்றி! பூவினுக் கிறைவா போற்றி!
இருட்செறி மனந் துலக்கு மிரவியே போற்றி போற்றி!

[பூசகர் வாகீசருக்கு விபூதி அளித்தல்]

அனைவரும்:— வாகீசர் வாழ்க! வண்டமிழ் வாழ்க! சிவம் வாழ்க! சிவநெறி ஓங்குக!

வாகீசர்:— உள்ளச் சிற்றம்பலத்தில் ஒளி வளரும் தன் மயமே! ஞான நடத்தரசே, ஞானத்திறைவா! சிற் சக்தியான கங்கை யணிந்தோய்! ஆத்மானந்தமாம் பிறை சூடியவா! ஆணவப் புலியை உரித்தணிந்தோனே! ஞாலம் படை

க்கும் நாதப்பறையும், ஆன்மச் சோதியும் அபயமும், அருளும், பொலியும் கையா! போற்றி போற்றி! மானென த்துள்ளும் மனத்திற் கெட்டாத் துரியந் தன்னில் தூக்கிய திருவடி, நலித்திட மாயையை நாட்டிய திருவடி, போற்றி போற்றி, புவியெலாம் போற்றி! இறைவா நின் கருணையை எவ்வாறு பாடுகேன்!

பத்தனய்ப் பாடமட்டேன் பரமனே பரமயோகி
யெத்தினற் பத்தி செய்கேன் என்னைநீ யிகழவேண்டாம்
முத்தனே முதல்வா தில்லை அம்பலத் தாடுகின்ற
அத்தாவுன் னுடல் காண்பான் அடியனேன் வந்தவாறே!

[தியானம் செய்தல்.]

எல்லாரும்:—*திருச்சிற்றம்பலம்! அடியார் வாழ்க!*

[தீபாராதனை.]

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பல மேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே!

ஞாலத் துயர்காழி ஞான சம்பந்தன்
சீலத்தார் கொள்கைச் சிற்றம்பலமேய
சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை
கோலத்தாற் பாட வல்லார் நல்லாரே!

வாகீசர்:—*ஆ! ஞானசம்பந்தர் தமிழ் திருமறைத் தமிழ்!*

சிவபாதம்:—*பெருமை மிக்க அடியார் அவரைக் காண வேண்டும். அவர் பெருமை அற்புதம்!*

வாகீசர்:—அடியார்க் கடியேன் அவரைக் காண வேணவா! அவர் அருட் பெருமை செவிக்கின்பம்!

சிவபாதம்:—

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறை விளங்கப்
பூதபரம் பரை பொலியப் புனிதவாய் மலர்ந் தழுத
சீதவள வயற் புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்!

அடியார் கேட்கட்டும். சீர் காழியில் சிவ பாத இருதயர், பகவதியார் என்னும் சிவநேச தம்பதிகளுக்கு ஆளுடைப் பிள்ளையார் உதித்தார். மூன்று வயதில் தந்தையாருடன் தீர்த்தக்கரை சென்றார். பிள்ளையைக் கரையில் இருத்தி சிவ பாதர் முழுக்காடச் சென்றார். பிள்ளையார் சிவஞான சம்பந்தம் அறாத முற்பவத்தை யெண்ணினர். 'அம்மே அப்பா' என விம்மியழுதார். உடனே திருத்தோணியப்பன் சிவசக்தியுடன் போந்து, சக்தியைப் பால் தரச்சொல்லவே, அன்னையார் தனது முலைப்பாலுடன் ஞான சக்தியைக் கலந்து பொற் கிண்ணத்தில் கொடுத்து மறைந்தார். பிள்ளை ஞானப்பா லுண்டது. சிவபாதர் முழுக்காடி வந்து பிள்ளை உதட்டில் பால் வடிவைக்கண்டு யார் உனக்குப் பால் கொடுத்தார் என்றலும், மூன்று வயதுக் குழந்தை அருள்வாய் மலர்ந்து தோடுடைய செவியன் 'என்று 'ஓ' எனும் பிரணவ ஒலியை முன் வைத்த அரிய அருட்பா பாடவே அனைவரும் வியந்து மகிழ்ந்தனர். அன்று முதல் அவருக்குத் 'திருஞானசம்பந்தர்' என்னும் திருநாமம்வழங்கியது. அன்றுதொட்டுத் திருப்பதிகளுக்குச் சென்று தேவாரம் பாடிவருநாளில், சிவபெருமான் திருக்கோலக்கா என்னும் ஊரில் ஞான சம்பந்தருக்குப்

பொற்றுளம் ஈந்தார்; திருவறத்துறையில் முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னங்கள் கொடுப்பித்தார். திருநீல கண்ட யாழ்ப்பாணர் அவர் பதிகங்களைக் கூடவே யாழில் இனிமையாய் மீட்டுகிறூர்.

மறைப் பொருளை ஓதா துணர்ந்த அவருக்கு இப் போதுதான் உபநயனமும் பஞ்சாட்சரி உபதேசமும் நடந்தன.

வாகீசர்:— அடியார் பெருமை அளவற்றது. அந்தப் பால் மணம் மாறு வாயரை, சிவஞானக் கிழவரை நாம் சென்று வணங்குதும்.

சிவபாதம்:— அவசியம் காணவேண்டும்.

தில்லைக் கூத்தனே, துரியசிவனே, நினது பெருமை மொழி மனத் தடங்கியதோ! வேதப் பொருளனைத்தும் நீயே! வேதங்கடந்த விமலன் நீயே! நின்னை உணர்ந்தவர் பிரிவ தாமோ! நின்னைப் பேசியோர் வேறு பேசுவரோ? நின்னைப் பேசாது வாழ்வரோ!

அரியானை அந்தணர்தஞ் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கடங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக்காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

எல்லாரும்:—திருச்சிற்றம்பலம்! அருட்சோதி வாழ்க!

சிவநேசன்:—வாக்கிற் கரசே! இவ்வொரு தேவாரமே நான் மறைப் பொருளையும் அடக்கி ஓங்கி ஒலிக்கின்றதே! இதற்குப் பொருள் விரிப்ப தென்னில் அதுவே தனிமறையாய் முடியும். தமிழ் மொழி வாழ்க!

எல்லாரும்:— வாகீசர் வாழ்க!

வாகீசர்:— அன்பர்காள் இனி நாம் தலங்கள் சுற்றிச் சீர்காழி செல்வோம். தில்லைச் சிற்றம்பலவா! நினது திருவடி நிழலைப்பற்றி விடைபெற்றேன்!

அன்னம் பாலிக்கும் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்குமோஇப் பிறவியே!

அல்லல் என்செயும் அருவினை யென்செயும்
தொல்லை வல்வினைத் தொண்டர்தா னென்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம்பலவனுர்க்கு
எல்லை யில்லதோர் அடிமைபூண் டேனுக்கே!

தில்லை போற்றி! திருவருள் போற்றி! சிவ சிவ சிவ சிவ சிவ!

[வாகீசர் செல்லல். அன்பர் வழி நடத்திப் பின் செல்லல்.]

---

# காட்சி கஎ.

[சீர்காழி - தோணியப்பர் கோயிற் காட்சி — ஞானசம்பந்தர் திருநீலகண்ட யாழ்ப்பாணர், அன்பர்]

ஞானசம்பந்தர்:—[பாடும்போது யாழ்ப்பாணர், உடனே யாழ் மீட்டல். சம்பந்தர் கையில் பொற்றாளம் உள்ளது.]

மண்ணினல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணினல் லகதிக் கியாதுமோர் குறைவிலைக்
கண்ணினல் லஃதுறுங் கழுமல வள நகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே.

போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே

அடியார்களே! பால் மணமாறாப் பாலகனான அடியேனுக்கு ஞானப்பால் ஊட்டி ஆட்கொண்ட எம்பெருமான் அன்பர்க் கெளியான், என்னையுடையான் திருவடியில் உளத்தை இருத்துமின்! அதுவே இன்ப நிலயம். அவ்வின்ப நிலயமே தனது உள்ளமான வாகீசப் பெருமான் இன்று வருகின்றார். அவரை எதிர்கொள்வோம்.

நம்பொருள் நம் மக்களென்று நச்சியிச்சை செய்துநீர்
அம்பரம் அடைந்து சால அல்ல லுய்ப்பதன் முனம்
உம்பர் நாதன் உத்தமன் ஒளிமிகுத்த செஞ்சடை
நம்பன்மேவு நன்னகர் நலங்கொள் காழி சேர்மினே

பாவமேவும் உள்ளமோடு பத்தியின்றி நித்தலும்
ஏவமான செய்து சாவ தன் முனம் இசைந்துநீர்
தீப்மாலே தூபமுஞ் செறிந்த கைய ராகிநம்
தேவ தேவன் மன்னுமூர் திருந்துகாழி சேர்மினே.

[ சிவபாதம் வருதல். ]

சிவபாதம்:—வாகீசப் பெருமான் வருகிறார்!

ஞானசம்பந்தர்:—பேரின்பம்! பேரின்பம்! அரும்பெரும் பெருமை வாய்ந்த அப்பரை, வாகீசரை, ஐந்தெழுத்தின் சிறப்பை நீற்றறையிலும், நஞ்சிலும் மதயானையிலும், கடலிலும் இடர்ப்பட்டு உலகறியக் காட்டிய தொண்டரை அடியேன் வணங்கும் பேறு கிடைத்தது. இன்பம் இன்பம்!

[வாகீசர், அடியார், வருதல்]

வாகீசர்:–[தேவார முழக்கம்.]

மாதியன்று மனைக்கிரு வென்றக்கால்
நீதி தான்சோல நீயெனக்காரெனுஞ்
சோதியார்தரு தோணிபு ரவர்க்குத்
தாதியாவனுன் என்னுமேன்றையலே

முருகு காதலுடன் வந்தனன்—அம்மை யப்பனே அழுதணைத்துக்கொண்ட அரும் பெருஞ் செல்வரே! ஞான சக்தியின் திருப்பாலுண்ட சம்பந்தப் பெருமானே! வணக்கம், அடியார்க் கடியேன் வணக்கம். சிவ சிவ சிவ சிவ!

[பணிதல்]

ஞானசம்பந்தர்: சிவச் செல்வப் பெரியோய்! சிவனருளால் வாக்கிற் கரசான வள்ளலே! நீற்றறையினும் சிவ பெருமான்

கருணை மலர்ப்பாதங்கண்ட நிகரற்ற சிவ நேயரே! நீலகண்டன் பெயரால் நஞ்சும் அமுதாகப் பெற்றவரே! மதயானையை அஞ்சாது வென்ற வீரசைவரே! ஐந்தெழுத்தின் பெருமையால் கல்லும் தெப்பமாகப் பெற்ற சிவசித்தரே! தங்களைக் காணப்பெற்றதே பெருஞ்சிவப்பேறு, தங்கள் அன்பு வெற்றி வாழ்க! வணக்கம்! வணக்கம்!

[கைகளால் வாகீசரை எடுத் திறைஞ்சி]

அளப்பறுஞ் சிவப்பே றடைய என் அப்பரே! அப்பரே! அப்பரே! அப்பரே!

வாகீசர்:—அடியேன்! அடியேன்! அடியார்க் கடியேன்!

எல்லாரும்:—அப்பர் வாழ்க! அப்பர் வாழ்க! அப்பர் வாழ்க அப்பர் வாழ்க!

அப்பர்:—ஞானப் பிள்ளையாரே, தமது கழ லிறைஞ்சப் பெற்ற பேற்றினை என்னென்று புகல்வேன்!

சம்பந்தர்:—அப்பரே, சிவச் செல்வ மோங்கிய வாக்கின் மன்னரான தங்களைக் காணப்பெற்றபேறு எளிதோ? தொண்டர்தம் பெருமை சொல்லவும் படுமோ! இருவரும் சிவநேசத்தால் ஒருவராகி அருட்பணி புரிவோம்.

சிவபாதம்:—இரு காந்தங்களின் வடகோடும் தென் கோடும் பொருந்துவது போன்றது அடியாரின் அன்புறவு; அப்பர் முதியவர். பாலகனை ஞான சம்பந்தப் பிள்ளையை வணங்கிப் பணிந்தார். ஞானசம்பந்தர் அந்தணர்; அப்பரே என்று வாகிசரை இறைஞ்சினர்; அன்புப்பெருக்கில் வயது வருண வேற்றுமைக ளெல்லாம் வெள்ளத்தில் உப்பெனக் கரைந்து

விடுகின்றன. உலக ஒற்றுமைக்கு இப் பேரின்பக் காத லன்றோ அடிப்படை? கடவுளுறவே உறவு? மனிதர்கள் ஆசையாலும் வேட்கையாலும், வீரியத் தினவாலும் எத்த னேயோ வகையாக உறவு கலக்கின்றனர். உலக ஒற்றுமைக் காக எத்தனேயோ சீர்திருத்தங்கள் செய்கின்றனர். அவை யெல்லாம் ஒற்றுமையின் பழஞ் சட்டை; ஒற்றுமையின் உள்ளம் அனைவர் உள்ளத்துங் கோயில் கொண்டுள்ள கட வுள் அன்பிலுள்ளது. அவனே உயிர் மேனியான். அவனு டன் உறவு கலந்தார் அவன் உணர்வில் பிரியாக்காதலுடன் ஒன்று படுவர். அத்தகைய ஒற்றுமை உலகில் ஒரு பெரிய சக்தியாகும். கடவுட் கலப்பு சுடருற் றோங்குக!

ஞானசம்பந்தர்:—அப்பரே, தோணியப்பரை தரிசிக்கலாம் எழுந்தருள்க!

வாகீசர்:—அப்படியே! அடியார்களே! கோயில் புகுவோம்

எல்லாரும்:—சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ!

[தோணியப்பா சந்நிதியில் அன்பர் நிற்றல்.
தீபாராதனை நடக்கிறது.]

அன்பர்:—

நன்னெஞ்சே உனையிரந்தேன் நம்பெருமான் திருவடியே
உன்னஞ்சேய் திருகண்டாய் உய்வதனை வேண்டுதியேல்
அன்னஞ்சேர் பிரமபுரத் தாரமுதை யெப்போதும்
பன்னஞ்சீர் வாயதுவே பார்கண்ணே பரிந்திடவே!

திருச்சிற்றம்பலம்! போற்றி சிவ சிவ போற்றி போற்றி!

ஞானசம்பந்தர்:—அப்பரே வாக்கிற்கரசே, எம்பிரானைப் பாடியருளுக

அப்பர்:—(கண் பெருகி யுருகி) சிவ சிவ சிவ!

பார்கொண்டு மூடிக் கடல்கொண்டஞான்று நின்பாத
நாலைந்து புள்ளினமேந்தினவேன்பர் நளிர்மதியுங்[மேல்லாம்
கால்கொண்ட வண்கைச் சடைவிரித்தாடுங் கழுமலவர்க்கு
ஆளன்றி மற்றுமுண்டோ அந்த ணாழி யகலிடமே

அன்பர்:— திருச்சிற்றம்பலம்!

ஞான:—வாக்கிற் கரசே—தங்கள் அருள் மொழிக் கனிவு என் உள்ளத்தை அள்ளுகின்றது. தங்கள் வாக்கு சிவம் விளக்கிவெற்றிபெறுக!

அப்பர்:—சொல்லும் பொருளும் சேர்ந்தால்போல நாம் சித்த நெகிழ்ச்சியுடன் அளவளாவி அரன் பணி புரிவது எத்துணை மகிழ்ச்சியாகும்! சிவ சக்தியுடன் அறிவில் உலவும் அண்ணலே, நமது தமிழகம் புறச் சமய வாதிகளின் கையில் இடர்ப்பட்டு அரு ளறிவிற் குன்றி வருகின்றதே! அமுதினும் இனிய தமிழரசி இன்று முகம் வாடிச் சோர்ந்திருக்கின்றாள்; தமிழர் எல்லாம்வல்ல தனி முதலான பரம்பொருளை மறந்து ஏதேதோ போலி ஒழுக்கங்களிற் புகுந்து மயங்கி நிற்கின்றனர். அந்தோ, அருளை நினையாது அரனைத் துதியாது, வீண் வாதங்களிலும் வேண்டாப் புற ஒழுக்கங்களிலும் நமது தாய்நாடு உழல்கின்றது. எல்லாம் தமது திருவுளம் அறியும்.

சம்பந்தர்:—இறைவன் திருவருட் கட்டளை அஃதே. தெய்வத் தமிழும் சிவநெறி விளக்கமும், தழைத்தோங்குதற்கே

அவன் இக்காலத்தில் சிறந்த அடியார்களுக்கு அருட்சக்தி யளித்துள்ளான். அடியேன் அரன்பணிக்கே, சிவ நெறிச் செழிப்பிற்கே தமிழ் மறைப் பெருக்கிற்கே அருட்டிறனல் ஏவப்பட்டு ஆளாகி நிற்கிறேன்; தாங்கள் சொற் கோவாகிச் சுடர் ஞானக் கொழுந்தாகி அற்புதத் தொண்டு புரிகின்றீர். இதோ இன்னிசைத் தொண்டர் திருநீலகண்ட யாழ்ப்பாணர் யாழால் பணி செய்கிறார்.

அப்பர்:—இன்னிசைப் பணியுடையாருக்கு வணக்கம்.

ஞானசம்பந்தர்:—மதுரையில் நமக்கு ஏராளமான பணி யுள்ளது.

அப்பர்:—ஆம் அங்கு அரசன் கூன் பாண்டியனும் புற சமயத்தைச் சார்ந்து சிவநெறி வழுவினான். அங்கு சிவச்சுடர் தூண்டவேண்டும்.

ஞானசம்பந்தர்:—நிலவில்லா இருளிலும் தாரகையால் ஒளி காட்டும் எம்பெருமான், சிவ சமயம் குன்றிப் புறச் சமய இருள் படர்ந்த பாண்டி நாட்டிலும் மங்கையர்க்கரசி, குலச்சிறை நாயனார்போன்ற உள்ளன்பரைப் படைத்துள்ளான். ஆதலின் குறைவில்லை. சைவச்சுடர் மீண்டும் கதிரோங்கும். இன்றும் தங்களுக்கு மிகவும் அன்பு பூண்ட அப்பூதி யடிகள், சிறுத்தொண்டர், திருநீலநக்கர், முருகனார் குங்கிலியக் கலய நாயனார் முதலியோர் சிறந்தொளிர் கின்றனர். அடியார் மூலம் அரன் தனது இச்சையை நிறைவேற்றுவான்.

அப்பர்:—அப்பூதி யடிகளைப்பற்றிக் கேள்விப் பட்டுள்ளேன். இன்னும் சில தலங்களைச் சுற்றித் திருப்பழனஞ் சென்று பிறகு அவரைக் காண்பேன். அடியார்காட்சி அமு

தினும் இனிது. இப்போது சோழ நாட்டுத் திருப்பதிகளை வணங்க விருப்பம்.

ஞானசம்பந்தர்:—அப்படியே முதலில் திருக்கோலக்காவிற்குச் செல்வோம்.

அப்பர்:—அவ்வாறே.

ஞானசம்பந்தர்:—அம்மையப்பன் அருட்டுணை புரிக. சிவ சிவ சிவ சிவ!

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக்காவுளான்
சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங்கீழ்
உடையுங்கொண்ட உருவமென்கொலோ!

[எல்லோரும் செல்லல்]

---

## காட்சி கஅ.

---

[திங்களூர் அப்பூதியடிகள் வீட்டின் முன் அப்பர், சிவபாதம், சிவநேசன்]

அப்பர்:—

நினைந்துருகும் அடியாரை நையவைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்கவைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்து வானோர்

இனந்துருவி மணிமகுடத் தேறத்துற்ற
இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப்பில்கி
நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்லவாறே!

சிவபெருமானின் கருணைப் பெருக் கென்னே! திருச்சத்தி முற்றத்தில் பூவாரடிச் சுவடென் மேற் பொறித்து வைக்கப் பாடியதும், நல்லூருக்கு வாவென்றழைத்து அவ்வாறே திருவடியைச் சூட்டினார். திருப்பழனத்தினின்று இப்போது திருவுடையடியார் அப்பூதியடிகள் வசிக்கும் திங்களூர்ச் சாலைக்கு வந்துளோம். வரும் வழியில் தண்ணீர்ப் பந்தலில் நமது பெயர் பொறித் திருக்கக் காரணமென்ன?

சிவநேசன்:—அது மட்டுமோ? இதோ திருநாவுக்கரசு கிணறு திருநாவுக்கரசு குளம், திருநாவுக்கரசு மனை, திருநாவுக்கரசர் அறச்சாலை, திருநாவுக்கரசுச் சோலை, எல்லாம் திருநாவுக்கரசாயிருக்கிறது! அப்பூதியடிகளின் அன்பு அத்தகையது. இதோ ஒரு திருமனை தெரிகிறதே. இதுதானோ அவர் இல்லம்?

[அப்பூதியடிகள் வருதல்]

அப்பூதியடிகள்:—ஆ! சிவனடியாரா, வருக! வருக! வணக்கம்! சிவ சிவ சிவ சிவ! நமச்சிவாய! சிவனடியார் எமது மனையெதிரே வந்தருளக் கருணை புரிந்ததற்கு என்ன தவஞ் செய்தேன்?

அப்பர்:—அறநெறி மறையோய்! அரனடிக் கன்பீர், வணக்கம்; திருப்பழனங்கண்டு வருகின்றோம்; வழியில் நன்னிழற் றண்ணீர்ப் பந்தல் கண்டு உவந்தோம். தாங்கள் புரிகின்ற

அறவினைகளைக் கேட்டு மகிழ்ந்தோம். ஆரணி சடையான் அடியார்க்கு நீர் வைத்த தண்ணீர்ப் பந்தலில் நும் பேர் எழுதாமல் வேறொரு பேர் எழுதியது என்ன காரணம்?

அப்பூதி:—நன்றருளிச் செய்தீர்! பல்லவன் இழைத்த சொல்லொணா இடும்பைகள் பொறுத்து, சிவப் பெருமைக்கு வெற்றி சூட்டிய அவருடைய திருப்பெயர் வைப்பதோ வேறொருவர் பெயர் வைப்பதோ? சிவனடித் தொண்டர் இம்மையிலுஞ் சீர் பெறுவர் என்று எம்போலியர்க்குத் தெளியச் செய்து செம்மைபுரி திருநாவுக்கரசரின் திருப்பெயரை எழுதியிருக்க ஏன் இவ்வணம் வெம்மையுறக் கேட்டீர்? ஐந்தெழுத்துப் பெருமையால் கல்லையுந் தெப்பமாக்கிக் கடலைக் கடந்த அவர் பெருமை அறியார் யார்? மங்கலமான சிவ வேடத்துடனிருந்தும் இவ்வாறு நீர் மொழிந்தீர்! நீர் யார்?

அப்பர்:—(தனக்குள்) ஆ! அன்பிற் சிறந்த அடியார் இவர். அரனிடம் உள்ளம் வைத்து, சாதிச் செருக்கு சற்றுமின்றி அரனடியார் அனைவரையும் ஒரு குலமெனவும், அரன் வடிவெனவும் பணிந்தேற்று விருந்திட்டுப் பணிசெய்யும் இவ்வந்தணர் புனிதப்பெருமையென்னே! அனைத்திற்கும் பொது நிற்கும் வள்ளலான இறைவனை யன்பிற் கலந்தோர், உலகில் நடமாடுங் கோயில்களான ஆருயிர்களை உள்ள வுறவில் கலப்பர்: அவர்களுக்கு ஒன்றே குலம், ஒருவனே தேவன்! (புறத்தில்) திருமறையோய், புற நெறியினின்று கரையேற்ற எம்பெருமான் சூலை நோய் தந்து ஆட்கொள்ள உய்ந்த தெருளுணர்வற்ற சிறுமையேன் யானே!

அப்பூதி:—[ புளகித்து ] ஆ! என்ன பேறு பெற்றேன்! போற்றி போற்றி! திருநாவுக்கரசே, போற்றி! போற்றி!

அடியனேன் வணக்கம்; நாவிற் கரசரே வணக்கம் இன்பத்
துடியனேன் வணக்கம்; அன்பு துளக்குறுஞ் சிந்தையாலே
வடிகணீர் அருவி யாட்டி மனமலர் சூட்டி நாளும்
அடைந்திட நினைந்தேன் காட்சி யளித்தனை யருளின்
[வாழ்வே!

அப்பர்:—சிவ சிவ சிவ சிவ! சிவ நலம் பொங்குக!

அப்பூதி:—எம தில்லத்தைத் திருவடிகள் புனித மாக்குக! எழுந்தருள்க!

[கால் கழுவி மனைக்குட் செல்லல்]

பெரிய திருநாவுக்கரசு! சின்னத் திருநாவுக்கரசு! எல்லோரும் அம்மாளைக் கூட்டிக்கொண்டு உடனே பூஜையறைக்கு வாருங்கள்!!

[பூஜையறையில் நாவுக்கரசரை ஏற்றல்]

சிவனடியார் இவ்விருக்கையில் எழுந்தருள்க!

[அப்பூதி யடிகள் மனைவி மக்கள் வருதல்]

எல்லாரும் சிவனடியாரைப் பணிமின். நாம் நெடுநாள் காணக் காதலித்த சிவயோகச் செல்வர், திருநாவுக்கரசர் இதோ நாம் செய்த தவத்தால் நம்முன் விளங்குகின்றார்.

மனைவி:—வணக்கம்-ஓம் சிவ சக்தி! ஓம் சிவ சக்தி!

மக்கள்:—வணக்கம். சிவ சிவ சிவ சிவ!

அப்பூதி:—வாகீசாய நம:

சிந்தையிற் கலந்தேப் போதுந் தித்திக்குஞ் சிவப்பே ரின்பம்
வந்ததுன் கருணை யாலே வாய்மன மடங்காச் சோதி
சேந்திரு தழைத்த துள்ளஞ் செழித்ததுன் னருளி னூற்று.
தந்தன னென்னை தெய்வத் தளிரடி சிரத்திற்கொண்டேன்!

அப்பர்:—நமச்சிவாய, நமச்சிவாய! அன்பி லூன்றி இன்ப மாய் வளர்ந்து சிவக்கனி பழுக்கும் இல்லறமாகிய நல்லறந் தாங்கும் செல்வர்காள், அடியார்க்கடியார்களே, உங்களுக்கு சிவ சக்திக்கனலோங்குக! சிவனும் சக்தியும், யோகமும் போகமும் போல, அருளுறவு கலந்து அன்பிற் பழுக்கும் இல் வாழ்வை உலகம் உங்களிடமிருந்து கற்கட்டும். சிவநே யத்தில், மனமூன்றி, அருளும், பொருளும், வாய்மையும், தூய்மையும், அன்புப், பண்பும், ஆண்டவன் பணியும், ஆரு யிர்ப் பணியும், கற்புப், பொற்பும் நிறைந்த மனை மாண்பு டைய மறையோய், நின் குலப் பெருமை நீடூழி வாழ்க! சிவ சிவ சிவ சிவ!

[திருநீறு அளித்தல்; மலர் தருதல்]

அப்பூதி:—எளியேம் உய்ந்தேம்! அடியார் அமுது செய்த ருள்க.

[மனைவியிடம்]

திருநாவுக்கரசி, நல் விருந்து தயார் செய். பெரிய திருநாவுக்கரசு, நீ உடனே சென்று வாழை யிலை அறுத்து வா.

[இருவரும் செல்லல்]

அப்பர்:—யாம் சிறிது தனியே சிவத் தியானத்திலிருக்கி றோம்.

அப்பூதி:—சித்தம்-யாங்கள் அமுதிற்கு அழைக்கிறேம். இவ் வீடு தங்கள் உரிமை; பெரியார் மனமுவந்து எப்படி இச் சையோ அப்படி ஆளட்டும்!

[செல்கிறார்; அறைக்கதவு அடைக்கப்படுகிறது]

சிவபாதம்:—[அறைக்கு வெளியே] எங்கும் திருநாவுக்கரசு! எல்லாம் திருநாவுக்கரசு! அண்ணல் பெருமை யென்னே! உண்மையான கடவுட் காதல் உலகை வெல்லும். இக்காதலி லன்றோ சமரசம் மலரும்! உள்ளன்புருகும் உறவினாலேயே சாதிச் சழக்குகள் தாமாய் விலகும்! பேசி என்ன? எழுதி யென்ன! வைதென்ன? வம்பாடி யென்ன? பூவின் ஒற்று மைக்குப் புல்லுருவியான இவ்வேற்றுமை இருள் அன்புச் சுடரிலேயே அழியும். இதோ அன்புக் கடலில் அற்றது சாதி! அடியார் அடியை அந்தணர் வணங்கினார். அப்பரு டனே அந்தணர் உண்கிறார்.

சிவநேசன்:—அன்பு வாழ்க! அன்புச் சமரசம் ஆணவத்தை வென்று உலகை ஒற்றுமைப்படுத்துக. அன்ப, ஒன்று உறுதி யாகச் சொல்லுவேன்! நமது தமிழர் முன்னேறமுடியாது முட்டுக்கட்டை போடும் சாதி சமயப் பூசல்களுக்கு மருந்து திருத்தொண்டர் வாழ்விலுள்ளது. அடியார் வாழ்வும் அருள் வாக்கும் தமிழர் உள்ளத்தில் பதிந்து, ஊனிலும், உயிரிலும், உள்ளிலும், ஆன்மாவிலும் கலக்கவேண்டும்.

[அப்பூதியடிகள் வருதல்]

அப்பூதி:—பெரியார் அமுது உண்ண எழுந்தருள்க! (தனக் குள்) அந்தோ! நடந்த செய்தி யறிந்தால் பெரியார் அமுது செய்யாரே! என் செய்வது! பெரிய திருநாவுக்கரசு இலை கொய்யும் போது அரவு தீண்டி இலையைக் கொணர்ந்து

ஏற்ற பணியை முடித்து உயிர் நீத்தான்! என தருமை மகன் இறந்ததைக்கூடக் கருதவில்லை. பெரியார் அமுது செய்வது தடைப்படுமே யென்று வருந்துகிறேன். இருக்கட்டும். பிணத்தை அவள் இரகசியமாக மூடிவைத்துள்ளாள். இறந்த வீட்டில் அழுகையும் கூக்குரலும், மாரடிப்பும், அமளிபடும்; சிவஞான நலத்தால் நம்மனையில் அத்தகைப மூட நாடகங்கள் இல்லை.

சிறுவன் சிவனடி சேர்ந்தான், அவனிச்சை உயிரைத் தருகிறது; அவனிச்சை உயிரை வாங்கிக்கொள்ளுகிறது. இதற்கு அழுகையேன்! அழுவது அறியாமை. சிவபிரானே நீ தந்த செல்வன் நின்றாள் சேர்ந்தான்! சேர்ந்தான்! அவன் வினைப்படி யாண்டுகொள்! சிவனடியார் பணியில் இறந்தான். அடியார்வடிவே, ஆகுக நின் செயல்! சிவ! சிவ சிவ சிவ!

அப்பர்:—[பூஜை அறையினின்று வெளி வந்து] வெகுவிரைவில் அமுது தயாராக்கினீரோ! சென்று சிவ நினைப்பில் உண்போம் (மனதுள்) என்ன ஏதோ ஒரு உணர்வு? இங்கே ஏதேனும் நேர்ந்ததோ? சென்று வினவுவோம். அடியாரே, தங்கள் இரண்டு மக்களையும் அழைத்து வாருங்கள் உடனுண்ண!

அப்பூதி:—இதோ சின்னத் திருநாவுக்கரசை அழைக்கிறேன். மூத்தோன் உதவான். அடியார்களே எழுந்தருளுங்கள்!

அப்பர்:—என் இப்படிச் சொல்லுகிறார்? வினவுவோம். சிவபாதம், சிவ நேசன், வாருங்கள்.

[எல்லோரும் செல்லல்]

---

## காட்சி கக.

---

[கோயில் முன் அப்பர்.]

அப்பர்:—என்ன அன்புறுதி! மகன் இறந்ததை மறைத்தும் மறந்தும் அடியார் பணியில் திடமாய் நின்றனரே! அடியார் நலிவு தீர்ந்ததே அருந்தவோம்! அப்பூதி யடிகளுக்கு ஒப்பு வேறுண்டோ! பரமனே, அன்று பகீரதனுக்கு கங்கையை யருளி சாம்பலாய்ப்போன சகரரை எழுப்புவித்தாய். அறுப்புண்டு வெந்து இலக்கறியான சீராளனை உயிர்ப்பித் தாய்! நின்னருள் வல்லபத்திற்கு எதுதான் அரிது? இம் மெய்யடியாரின் அருமை மைந்தனை எழுப்பித் தந்தருள வேண்டுப்.

[அப்பூதியடிகள், மனைவி, பிணமாகிய மகனை மூடித் தூக்கிக்கொண்டு வருதல்]

அப்பூதி:—பெரியீர் இதோ தங்கள் கட்டளைப்படியே கொணர்ந்தோம். சிவன் செயல் நடக்கட்டும்.

[கீழே வைத்தல்]

அப்பர்:—அர வணிந்த அரனே! விடமுண்ட கண்டனே! அரவின் விடம் நீக்கி நின்னடியார் திருப்பணிக் காளான இம் மைந்தனை உயிரோடு எழுப்பாய்.

[பாடிக்கொண்டே திருநீறிட்டுக் கையால் தடவல்.]

ஒன்றுகோலாமவர் சிந்தையுயர்வரை
ஒன்றுகோ லாமுய ருமதி சூடுவர்
ஒன்றுகோ லாமிடு வெண்டலைகையது
ஒன்று கோலாமவர் ஊர்வது தானே!

பத்துக்கோ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்
பத்துக்கோ லாமெயி றுங்நேரிந்துக்கன
பத்துக்கோ லாமவர் காயப்பட்டான்றலே
பத்துக்கோ லாமடி யார்செய்கைதானே.

[பையன் மெல்ல வாயைத்திறந்து எழுந்திருத்தல்]

பையன்:—ஆ! அம்மா! இலே இதோ; சிவ னடியாருக்கு அமுது செய்விக்கவும். சிவ சிவ!

அப்பூதி:—ஆ! என்ன வியப்பு! அடிகாள் இறந்தவன் எழுந்தான் இறைவனருளால், தமது தமிழின் தனித்திறத்தால்! சிவனருள் வாழ்க! தமிழ் வாக்கு வாழ்க! பெரிய திருநாவுக்கரசே! எழுந்திரு அப்பா, உன்னைச் சிவன் சித்தமென்று விட்டிருந்தேன்! சிவனருள் இம்மெய்யடியார் வாக்கினின்று உன்னைச் சிவத் தொண்டிற்காக உயிர்ப்பித்தது! உடனே அமுது செய்ய எழுந்திருங்கள். தங்கள் அமுதிற்குத் தடையேற்பட்டமை எம்மை வருத்துகின்றது! அடிமையின் இல்லத்தில் சின்னு ளிருந்து எம்மைப் புனிதராக்கியே செல்லவேண்டும்.

[சிவனுக்கு தீபாராதனே நடக்கிறது.]

சிவநலச் சோதி யெங்குந் திகழுக! சிவன ருட்கே
புவியெலாம் ஆட்பட் டோங்கிப் பொலிந்திட இன்பு மன்புந்
தவப்பெரு மேன்மையோங்கித் தழைத்திட வாழ்வு; தூய
சிவனடி யார்கள் வாழ்க! சேந்தமிழ் வாழ்க மாதோ!

[விபூதி ப்ரசாதம் அருளல்.]

அப்பர்:—அடியார் விருப்பம் ஆகுக! யாம் சிறிது காலம் தங்கள் மங்கல மனையிலிருந்து திருப்பழனஞ் சென்று திருவாரூர் சேருவோம்.

சிவபாதம்:—அடியாரே, திருஞான சம்பந்தர் திருப்புகலூருக்கு வரப் போவதாகத் தெரிகிறது: ஆங்கே திருநீலநக்கரும், சிறுத்தொண்டரும் இருக்கின்றனர்.

அப்பர்:—ஆம் அவர்களைக் காணலாம். திருஞானப் பெரியாருடன் திருத்தலங்கள் சென்று பணிபுரிதல் இன்பம், யாழுடன் குழல்சேர்ந்தன்ன இருவர் அன்பும் இணைந்துள்ளது. அதன் பின் திருவீழிமிழலைசேர்வோம். பணிபெரிது; நாள் சிறிது; ஆதலின் தாமதங்கூடாது.

அப்பூதி:—எளியேன் இல்லத்தில் அடியார் சில நாட்கள் இருக்கத் திருவருள் பூத்ததற்கு வணக்கம். உடனே அமுது செய்யப் புறப்படுவோம்.

அப்பர்:—திருப்பழனத்தானை இங்கே நினைக்குதும்:—

சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே.
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கள் முகிழ்விளங்கு முடிச் சென்னிப்
பொன்மாலை மார்பனெம் புதுநலமுண் டிகழ்வானோ!

வஞ்சித்தென் வளை கவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலி மெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே!

[எல்லோரும் செல்லல்]

---

## காட்சி உ0

---

[வழிச்சாலை: சிவபாதம் சிவநேசன் வருதல்.]

சிவபாதம்: அடியார் அன்புப் பெருமைக்கு அளவுண்டோ? திருப்புகலூரில் முருகனர் மடத்தில் திருஞான சம்பந்தர் இருந்ததும் தன்னை நோக்கிவந்த அடியாரை எதிர்கொண் டழைத்ததும் ஒருவரை யொருவர் வணங்கியதும் திருவாரூர் தியாகேசப் பெருமான் சிறப்பை அப்பர் பாடியதும், இரண்டு பெருந் தொண்டரும், தேவாரப் பணிபுரிந்ததும், சிறுத் தொண்டரும் திருநீல நக்கரும் இப் பெரியார்களைக் கண்டு கொண்ட காட்சியும், திருக்கடையூரானை வணங்கி, இரண்டு சமய குரவர்களும் திருவீழி மிழலை வந்து பாடிய இனிமையும் காட்டிய அருட் பெருமையும் என்னே!

சிவநேசன்:—ஆம்! எங்கும் பாழும் பஞ்சம் படர்ந்தது; வான் வரண்டது! வறுமையினும் கொடுமை யாது? வறுமை மடமை இரண்டே பாவத்தின் கைகள். இரண்டும் தீரின் உலகம் திருவும், அறிவும் சிறக்கும். அடியார் வறுமை வருந்தினர்.

சிவபாதம்:—படி யளப்பவன் பரம னன்றோ. ஞான சம்பந்தர் கனவில் தோன்றிச் சிவபிரான் சொல்லியவாறே கோயிலின் கீழ் வாசலிலும் மேல் வாசலிலும் இருவருக்கும் படிக் காசு வைத்திருந்தார். அதைக்கொண்டு அடியார் வாட்டந் தீர்ந்தனர்.

சிவநேசன்:—அப்பமூர்த்தியின் படிக்காசு வாசி யில்லாது மாற்றப்பெற்றது. சம்பந்தர் வட்டங் கொடுக்க வேண்டியிருந்தது. இதை அறிந்திரா? ஏனெனில் அப்பர் இறைவ

னையே பாடிப் பாட்டுடன் பணியும் பூண்டார். என்னப்பன் என்னைப் பாடினான். சம்பந்தன் தன்னைப் பாடினான், என்றது கேட்டோம்! அன்பும் பணியும் இசைவது இறைவனுக்கு உவந்தது!

சிவபாதம்:—ஆம் பிறகு சம்பந்தர்,

"வாசி தீரவே காசு நல்குவீர்
மாசின் மிழலையீர் ஏசலில்லையே"

என்று பாடி நற்காசு பெற்றார். இச் சிவனடியார்கள் பெருமையால் பின்பு எங்கும் மழை பொழிந்து செழிப்புற்றது.

சிவநேசன்:—இப்போது இருவரும் வேதாரண்யம் சேர்ந்திருப்பர். நாம் உடனே சென்று அவர் பணி புரிவோம்.

போரானை யீருரிவைப் போர்வை யானைப்
புலியதளே யுடையாடை போற்றினானைப்
பாரானை மதியானைப் பகலா னானைப்
பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்து நின்ற
நீரானைக் காற்றானைத் தீயா னானை
நினையாதார் புரமெரிய நினைந்த தெய்வத்
தேரானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே!

சிவ சிவ சிவ சிவ!

[செல்லல்]

---

## காட்சி உக.

[திருமறைக்காடு - கோயில் முன் அப்பர், ஞான சம்பந்தர் யாழ்ப்பாணர், சிவநேசன், சிவபாதம், அடியார் கணம்]

ஞான சம்பந்தர்:—அப்பரே, முன்னாளில் இக்கோயில் திருக் கதவு திருமறைகளால் திருக்காப்புச் செய்யப்பட்டது. நீண்ட காலம் இது மூடி யிருத்தலின் அன்பர்கள் பின்புறம் சென்று வணங்கி வருகின்றனர். இன்று இக் கதவு திறக்கப் பாடி யருளுக!

அப்பர்:—உள்ளமே அவன் கோயில். அதன் வாயில் அறிவு மலர்ச்சியால் திறப்பது; அதைத் திறக்குஞ் சொல்லே வேதம். ஓம், நமச்சிவாய!

பண்ணி னேர்மொழியாள் உமை பங்கரோ
மண்ணி னூர்வலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணி னால்உமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம் மினே!

அரனே, இன்னும் இரக்க மில்லையோ? அடியார் வேண்டுகோளுக் கிரங்கிக் கதவு திறந்தருள்க!

அரக்கனை விரலால் அடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீர் எம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கத வந்திறப் பிம்மினே!

[கதவு திறத்தல். சிவசந்நிதி விளங்குகிறது.]

சம்பந்தர்:—இதோ கதவு திறந்தது! தமிழ்மறை வாழ்க! வாக்கின் மன்னவரே, இனி நாம் சிவனை வணங்குவோம்.

[தீபாராதனை நடக்கிறது.]

எல்லோரும்:—*ஹர ஹர ஹர ஹர மஹாதேவ! அடியார் திறம் வாழ்க!*

அப்பர்:—

இந்திர ேனாடு தேவர் இருடிகள் ஏத்துகின்ற
சுந்திர மானார் போலும் துதிக்கலாஞ் சோதி போலும்
சந்திர னோடுங் கங்கை அரவையுஞ் சடையுள் வைத்து
மந்திர மானார் போலும் மாமறைக் காட னாரே!

[*விபூதி வாங்கிக்கொண்டு வெளியே வரல்*]

அப்பர்:—திருஞான வள்ளலே, இக்கதவு திறக்கவும் மூட வும் இயல வேண்டும்; ஆதலின் இது மூடுதற்குப் பதிகம் அருளுக.

ஞான சம்பந்தர்:—*அம்மை யப்பா! நின்னருள் நிறைவேறுக!*

சதுரம் மறைதான் துதிசெய்து வணங்கும்
மதுரம் பொழில்சூழ் மறைக்காட் டுறை மைந்தா
இதுநன் கிறைவைத் தருள்செய்க எனக்குன்
கதவந் திருக்காப்புக் கொள்ளுங் கருத்தாலே

[*கதவடைத்தல்*]

அப்பர்:—*ஆ! சிவஞானச் செல்வரே ஒரே பாவிற் கத வடைத்ததே. தமது அருட்டிறமை யென்னே! இப்போது கதவு மூடவும் திறக்கவும் வல்லது.*

அடியார்கள்:—*இவ்வற்புதச் செயலை இயற்றிய அருந் தமிழ் வாழ்க! அடியார் திறம் வெல்க!*

சம்பந்தர்:—*அன்பர்காள்! கடவுளறிவு வேதம்! மூவ் வழுக் கற்ற முத்தருக்கு, சிவனருட் சித்தருக்கு, அத்தன் தானே*

ஞானச்சுடரிலக்குவான். அப்படி உள்ளறிவு வளர்ந்து சிவா னந்தம் பருகும் அருளன்பர் திருவாக்கே, உலகனைத்தை யும் நடத்தும் திருமறை. தமிழ் வாழ்க! சிவம் வாழ்க!

அனைவரும்:—சிவ சிவ சிவ சிவ!

அப்பர்:—சிவஞான வள்ளலே, நாம் திருவாமூரைத் தரிசித் துப் பின்பு சில நாட்கள் திருமறைக் காட்டில் இருப்போம். பிறகு திருவருள் நோக்கப்படி செய்வோம்.

ஞானசம்பந்தர்:— பிறகு பாண்டி நாடு செல்லவேண்டும். அங்கு பெரும் பணியுள்ளது. கூன் பாண்டியனைச் சிவ நெறிக்குத் திருப்பித் திருவருட்டிறன் காட்டவேண்டும். தமிழகத்தைப் பிடித்த நாத்திகப் பேயையும் ஆணவ மலத் தையும் ஒழித்துப் புனிதமாக்கப் பெரும் பணி யுள்ளது! தங்கள் இச்சை யென்ன?

அப்பர்:—அரன் திறம் வெல்க! அடியேன் திருவாடுதுறை பழையாறை, வடதளி, பின்பு திருவானைக்கா, திருச்சிராப் பள்ளி, திருப்பைஞ்ஞிலி, திருவண்ணாமலை திருவேகம்பம், திருவொற்றியூர், திருக்காளத்தி, முதலியவற்றை வணங் கிப் பின்பு திருக்காசி வணங்கி, ஆங்கிருந்து திருக் கைலா யம் செல்ல எண்ணம் – திருவருள் நடத்துக!

சம்பந்தர்:—நன்று! அடியார்பணி வெல்க! நாம் இனித் திரு வாமூர் செல்வோம்.

[செல்லுதல்.]

---

# காட்சி உஉ.

[இமயமலை — அப்பர் உருண்டு உருண்டு மேற் சென்று ஒரு குளத்தருகே கை கால் சோர்ந்து புலம்பல்.]

அப்பர்:—

பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி!
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்துஞ் சொல்லானாய் போற்றி!
என் சிந்தை நீங்கா இறைவா போற்றி!
விண்ணு நிலனுந் தீ யானாய் போற்றி!
மேலவர்க்கு மேலாகி நின்றாய் போற்றி!
கண்ணின் மணியாகி நின்றாய்போற்றி!
கயிலைமலையானே போற்றி! போற்றி!

[இப்பாட்டை மெல்ல மெல்ல அயர்ந்தயர்ந்து பாடவேண்டும்.]

நமச்சிவாய, நமச்சிவாய! சிவ, சிவ, சிவ, சிவ, இறைவனே, திருக் கயிலையில் நினது அருட் கோலங் காணக் காதல் கொண்டேன் - சிவபெருமானே நினது வானோங்கும் அரியணையாகி அன்பர்க்கு நின் அன்புத்துணைபோல எழுந்து விளங்கும் இவ் விமய மலைமீது இம்மட்டும் உறுதி கொண்டு எப்படியோ வந்துவிட்டேன். நின்மேற் காதல் மிஞ்சினேன்! இவ்வுடலுயிர்ப் பற்றும் நீங்கினேன். சாக மூலபலங்கள் உண்பதுவுந் தவிர்த்தேன். இரவும் பகலும் ஊர்ந்தேன்; நின் அன்பே துணைக்கொண்ட அடியேனைத் தீய விலங்குகளும் எதுவுஞ் செய்யவில்லை; நாக மணிப் பாம்புகளும் விளக்கெடுத்தன. நடந்து நடந்து கால்களும் தேய்ந்தன! பசைத்தசை தேய்ந்தது; ஆயினும் மங்கை

பாகா, நினது வெள்ளி மால்வரை மீது வைத்த சிந்தை மற வாது கைகளால் தாவிச் சென்றேன். கைகளும் மணிப்பந் தசைந்து தேய்ந்தன; எனது உயிரிற் கலந்த அன்பே, மார் பினல் வருந்தி உந்தினேன். மார்பும் நைந்து வருந்தி எலும்பு முறிந்தது; பிறகு உடலாற் புரண்டு சென்றேன்! அங்கமெல்லாந் தேய்ந்தது - சிவனே, சிவனே கைலைப் பெருமானே, இனிச் செல வறியேன். சிவசக்தி விளக்கமே, இமயமே, சித்தருந் தேவரும் சுடரோங்கும் அருளா லயமே! சிவலிங்கம் போன்று கங்கை சூடி நிற்கும் தெய்வ மாண்பே, நின் மீதுள்ள எனது கைலை நாதனைக் காணுங் காதலால் துணிந்தேன். அன்று திருவாமூருக்கு வாவென்று வழிகாட்டி மறைந்த மாதவனே! வடதளிக் கோயிலில் நின் மூர்த்தியை மீட்டல்லது உண்ணேன் என்றிருக்க அவ் வாறே சமணரிடமிருந்து மீட்டுக் கொடுத்த வேந்தனே! திருப்பைஞ்ஞீலி செல்லும் வழியில் எனது பசி யறிந்து பொதிசோறு கொணர்ந்தீந்த புண்ணியனே! நீயே துணை! நீயே கதி, இனிச் செயலில்லேன்! சிவாய நம! நமச்சிவாய! சிவா அஅ! சிவா அஅ!

[ஒரு முனிவர் வருதல்]

முனிவர்:—எத்துணை அன்புறுதி – எனது திருநாவுக்கரச னைக் காக்கிறேன்! ஐயோ அங்கமெல்லாம் நொந்து நைந் ததே இன்னும் கைலையின் காதல் கடந்திலன். ஐய! ஐய!

அப்பர்:—முனிவ! வணக்கம் வணக்கம்!

முனிவர்:—உறுப் பழிந்து சிதைந்து இம் மலைமீது எய்திய தென்ன?

அப்பர்.—வற்கலையும் நூலும், சடை மௌலியும் பால் வெண் ணீறும் பூண்டு சிவக்கோலந் துலங்கும் முனிவர் பெரும,

சிவனுஞ் சிவையும் கைலை மீது திகழுங்கோலந் தன்னைக் கண்ணாற் கண்டு கும்பிடக் குறித்து வந்தேன்.

முனிவர்:—மானிடர் காண்பது அரிது; அடைத லொண்ணாது; ஆதலின் தாங்கள் இத்துடன் மீண்டு செல்வதே கடனாகும்.

அப்பர்:—என் செவி இம்மொழி கேளற்க!

---

ஆளுநாயகன் கயிலையிலிருக்கை கண்டல்லால்
மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன் என மறுத்தேன்

[முனிவர் மறைதல்]

சிவாய நம சிவாய நம: முனிவர் மறைந்தாரே!

[விண்ணில்]

நினது துணிவை வியந்தேன்! நாவிற் கரசே எழுந்திரு!

அப்பர்:—என்ன வியப்பு, உடல் சிதைவற்று முன்போல் திண்மையுற்றதே! இனிக் கைலை செல்வேன். அரனே பல வடிவில் அடியார் துணை நிற்கின்றனே.

அண்ணலே யெனை ஆண்டுகொண்டருளிய அமுதே!
விண்ணிலே மறைந் தருள்புரி வேத நாயகனே!
கண்ணினால் திருக் கயிலையி லிருந்த நின் கோலம்
நண்ணி நான்தொழ நயந்தருள் புரிக சிற்பரனே!

[விண்ணில்,]

அன்பனே, இப்பொய்கையில் மூழ்கி யெழுந்திரு! கைலையில் நாமிருக்கும் வண்ணமே திருவையாற்றிற் காண்பாய்!

அப்பர்:—இறைவ அவ்வாறே செய்கிறேன் நமச்சிவாய நமச்சிவாய!

[முழுகுதல்]

---

## காட்சி உ௩.

---

[ஐயாற்றுக் கோயிலில் அடியார்கள் வணங்கல்.
ஒரு வாவியினின்று அப்பர் எழுந்துவருதல்]

சிவபாதம்:—இதென்ன வியப்பு இந்த வாவியினின்று அப்பர் எழுந்து வருகிறார்!

அப்பர்:—சிவ சிவ சிவ சிவ கைலையின் காட்சி எங்கும்! எங்கும் சக்தியுஞ் சிவனும்! ஹர ஹர ஹர ஹர! ஓம் சிவ சக்தி ஓம் சுத்த சக்தி.

சிவநேசன்:—கைலை சென்றவர் இறைவ னருளால் இங்கு வந்துவிட்டார்! அப்ப மூர்த்திக்கு வணக்கம்!

அப்பர்:—அடியார் வாழ்க! கோயிலிற்கைலைகாண்கின்றேன். தேவர் சித்தரெல்லாம் முன் விளங்குகின்றனர்! பூதவேதாளங்களோடு சிவனைப் போற்றுனர். கங்கை காண்கிறேன்! வெள்ளி மலையுடன் பவளமலை யிருப்பதுபோல் சிவனுஞ் சிவையுந் திகழக் காண்கிறேன்! என் வள்ளலே! இன்பம்! பேரின்பம்! யாரே எனதின்பத்தை அளப்பார்!

ஓசை யொலி யெலா மானாய் நீயே!
உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே!

வாச மலரெலா மானாய் நீயே!
மலையான் மருகனாய் நின்றாய் நீயே!
பேசப் பெரிதும் இனியாய் நீயே!
பிரானாய் அடியேன்மேல் வைத்தாய் நீயே!
தேச விளக்கெலா மானாய் நீயே!
திருவையா றகலாத செம்பொற் சோதி!

[தீபாராதனை யாதல்.]

எல்லாரும்:— *ஹர ஹர ஹர ஹர மஹா தேவ!*

அப்பர்:— *ஓம் சிவ சக்தி! எங்கும் சிவசக்தி எல்லாம் சிவ சக்தி! ஓம் சுத்த சக்தி!*

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடி
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாமல் ஐயா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப் பாதம் கண்டறி யாதன கண்டேன்!

இன்பம்! இன்பம்!

வளர்மதிக் கண்ணியி னானை வார்குழ லாளொடும் பாடிக்
களவுப டாததோர் காலங் காண்பான் கடைக்கணிக்
[கின்றேன்
அளவு படாததோ ரன்போ டையா றடைகின்ற போது
இளமண நாகு தழுவி யேறு வருவன கண்டேன்
கண்டே னவர் திருப்பாதம் கண்டறி யாதன கண்டேன்!

எல்லாரும்:— *நாவுக்கரசர் வாழ்க, அரனருளால் ஐயாற்றிற் கைலை கண்ட அப்பர் வாழ்க!*

[திரைவிழுதல்]

---

## காட்சி உச.

[பூந்துருத்திக் கருகே ஞான சம்பந்தர் அன்பர் வெற்றி கூறச் சிறப்புடன் முத்துப்பல்லக்கில் வருகிறார். ஒருவருக்கும் தெரியாது அப்பர் சிவிகை தாங்குகிறார்.]

எல்லோரும்:—

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீய தெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையக முந் துயர் தீர்கவே!

பரசமய கோளரி வாழ்க! தமிழுஞ் சிவமும் தழைக்க வந்த சம்பந்தப் பெருமான் வாழ்க! முத்தமிழ் விரகர் வருக!

சம்பந்தர்:—அன்பர்காள், இதோ பூந்துருத்தி வந்தோம், அப்பர் எங்குற்றார்?

அப்பர்:—இதோ உம் அடியேன் உம் அடிகள் தாங்கி வரும் பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற்றேன்! ஞான வள்ளலே, தங்கள் வெற்றிக் கோலங் காணுங்காதலால் முன்னரே வந்தேன், வணக்கம்!

சம்பந்தர்:—அப்படியா! (சிவிகையினின் றிறங்கி) அப்பரே வணக்கம் வணக்கம்! அடியாரே வணக்கம்! அந்தணரே வணக்கம்.

தங்கள் திருவுளத்தால் பாண்டி நாட்டில் சிவப்பணி திருவுற் றொளிர்ந்தது!

அப்பர்:—பெரு மகிழ்வு! போற்றி சிவ சிவ போற்றி! போற்றி! இச்செவி தங்கள் வெற்றி அமுதுண்ணுக!

சம்பந்தர்:—மங்கையர்க் கரசியாரும், குலச்சிறையாரும் வேண்டுந் துணை புரிந்தனர். சிவபிரான் தோன்றாத் துணையாயிருந்து வேதமும், சைவமும் தமிழும் வெற்றியுறத் திருவருள் பாலித்தான். பாண்டியனும் அன்பனானன்.

அப்பர்:—சிவம்! சிவம்! சிவம்!

அன்பர்குழாம்:—பரசமய கோளரி வாழ்க! முத்தமிழ் விரகர் வாழ்க! பகைவர் வைத்த தீ பாண்டியற் காகுக என்று பாடிய பண்ணார் செல்வன் வாழ்க! திருநீற்றின் மாண்பினால் பாண்டியன் சுரந் தீர்த்த அரனருட் பிள்ளை வாழ்க! நின்னருள் வாக்கால், எரியில் எரியாதிருந்தது தமிழே! ஏறும் வெள்ளத்தை எதிர்த்தது தமிழே! தமிழின் அழியாத் தன்மையைக் காட்டினை! இளந்தமிழ் இனிமேல் இசை பெற்றோங்கும்! தமிழுக்குற்ற தடைகள் நொருங்கும்! அமுதத் தமிழின் அருளழகொளிரும்! பாண்டியன் சிவனடி பணித்திடச் செய்தாய்! பொலியுக சைவம்! நிலவுக செந்தமிழ்! வளருக இன்பம், வாழ்க சம்பந்தர்!

சம்பந்தர்:—இதோ அன்பரின் ஆரவாரமே மேல் நடந்ததைத் தெரிவிக்கின்றது. அப்பரே நமது சமயம் இனித் தழைக்கும். எல்லாம் சிவன் செயல்!

அப்பர்:—ஞானச் செல்வரே, இதோ திருமடம் வந்துவிட்டது. அனுட்டானங்களை முடித்து, ஆலயம் புக்கு அமுதுண்டு இளைப் பாறிய பின் தங்கள் வெற்றி வரலாற்றை முழுதுங் கேட்க வேண்டும். தங்கள் வெற்றிக் கொடி வள

ரும் பாண்டி நாட்டிற்கு யான் விரைவிற் செல்ல விருப்பம்.
சம்பந்தர்:— அப்படியே ஆகுக!

அன்பரெல்லாரும்:—

வீடலால வாயிலாய் விழுமி யார்கள் நின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள் கடிம்மதில்
கூடலால வாயிலாய் குலாய தென்ன கொள்கையே!
குற்றநீ குணங்கணீ கூடலால வாயிலாய்
சுற்றநீ பிரானு நீ தொடர்ந்திலங்கு சோதி நீ
கற்றநூற் கருத்துநீ அருத்தமின்ப மென்றிவை
முற்றநீ புகழ்ந்துமுன் உரைப்பதென் முகம்மனே.

[அடியார் நடன மாடிச் செல்லல்]

---

## காட்சி உரு.

---

[அப்பர் — சிவநேசன் — சிவபாதம் திருப்புகலூர்க் கோயிலில் உழவாரப் பணி செய்கின்றனர்.]

அப்பர்:—

முளைத்தானை யெல்லார்க்கும் முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடி மேல் முகிழ்வெண்டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவள நீறுத்
தூமுத்த வெண்முறுவல் உமையோ டாடித்

திளைத்தானைத் தென்கூடற் றிருவாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் யானே!

சிவபாதம்:—அப்ப மூர்த்தி, தாங்கள் பாண்டிநாட்டில் மிகவும் அருமையான பதிகங்கள் அருளிச்செய்தீர்! திருப்புத்தூர், திருவாலவாய், திருப்பூவணம், இராமேஸ்வரம் திருநெல்வேலி, திருக்கானப்பேர் முதலிய தலங்களில் பாடியவை அருமையாயிருக்கின்றன. அதனினும் இத் திருப்புகலூரில் நிலைத்துத் தாங்கள் அருளும் திருத்தாண்டகங்கள் மனத்தை உருக்குகின்றன. அடியார் சிவானந்தத்தேன் பருகுகின்றோம்.

சிவநேசம், சிவபாதம்:—(பாடுதல்)

வென்றிலேன் புலன்கள் ஐந்தும் வென்றவர் விளாகந் தன்
சென்றிலே ஞதலாலே செந்நெறி யதற்குஞ் சேயேன் [னில்
நின்றுளே துளும்பு கின்றேன் நீசனேன் ஈசனேயோ
இன்றுளேன் நாளை யில்லேன் என்செய்வான்தோன்றினே
[னே!

பரம குருவே, இதுவே, எமது குறை!

அப்பர்:—சிவனை அன்பு செய்மின்! உறுதி பூணுமின்! அவன் அருள் இருளைமாற்றும்! அழுக்கறுத்து அறிவொளிர்விப்பான் அவன்! அன்பும் பணியுமே அடியார் கடன்! அவனருளில் ஊன்றினோர் எதனாலும் கேடிலர். சிவானந்த முண்டவர் செம்பொன்னில் மயங்கார். திருவிளம்பெண்டிர் வலையிற் சிக்கார்.

[பொன்னும், வைரமும் காணல்]

சிவபாதம்:—இதென்ன! பெரியோய், உழவாரம் நுழைந்த இடமெல்லாம் பொன்னும் மணியுமாய்ப் பொலிகின்றதே! இதென்ன வியப்பு!

அப்பர்:—இதென்ன! இப்பொன்னிற்கும் நவரத்தினங்களுக்கும் இங்கென்ன வேலை! ஓகோ! ஒருக்கால் அவற்றை இவன் விரும்புவானென்று சோதிக்க வந்தன போலும்! இதோ இவற்றை உழவாரத்திலேந்திப் புல்லொடும், கல்லொடும் பொய்கையிற் பெய்குதும்.

[அங்ஙனமே செய்தல்]

[திடீரென்று அரம்பை மாதர் சூழ்ந்து பாடியாடுதல்]

அரம்பையர்:—

காதல் காதல் காத லென்று காத லின்பம் பேசடா
காத லின்றி யின்ப மில்லை கட்டையந்த வாழ்வுதான்!
பூத யாக்கை போந்ததும் புவி வளந் தழைப்பதும்
வேத நீதி யாதலும் விரும்பு காத லாலடா!

அப்பர்:—இதென்ன கூத்து! மற்றோர் சோதனையா? வந்து பார்க்கட்டும். நமச்சிவாய நமச்சிவாய

அரம்பையர்:—ஐயா! ஏனிந்தவரட்சி! வாழ்வை வாழாமல் இப்படித் தனிமை வகிக்கிறீர்; ஐயா துரையே! இதோ காதலை யளிக்கிறோம். எம்மைப் பார்! எமதழகைப் பார்! எமது சேல்விழியைப் பார் எமது மின்னிடை பார்! வாள்நகையைப் பார்! இதோ பார் எங்கள் மார்பை. இன்பம் எம்மிட முள்ளது! எமதின்பம் அரிது! வலுவில் உனக் கெய்தியது வா-வா! காதலின்பமே இன்பம்—துரையே! உன்பால் மையல் கொண்டோம் வா! இதோ விண்ணுலகை எம தின்பத்திற் காண்!

இன்ப மாகுங் காதலே யிகத்தினிற்பரந்தரும்!
துன்ப மாங் கவலையைத் துரத்திடும் மருந்திதே!

அன்பனே மனமுவந் தணைந்து பா ரதிசயம்!
முன்பு மின்று மேன்று மாம் முடி வறுஞ் சுகத்தினே.

அப்பர்:— புறஞ்செல்மின் பொய்ப்பேய்காள்! உங்கட்கு யான் ஆட்படேன்! என்னை நீர் அடிமைசெய்ய முடியாது! மதன வாடை இங்குசெல்லாது. இது சிவ மணச்சோலை!

போய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்ற னடித்தொடர்வா னுழிதர்கின்றேன்
இடையிலேன் கெடுவீர்கா ளிடறேன் மின்னே!

அரம்பையர்:—வள்ளலே! உமது வைராக்யத்தைச் சோதிக்கவே இறைவன் ஆணையால் வந்தோம். மன்னித்திடுக.

[வணங்கி மறைதல்]

[விண்ணில்]

வெல்லற்கரிய பொன், பெண் ஆசையை வென்றாய்! உனக்குச் சிவானந்த மாகுக!

சிவபாதம்:—அப்பமூர்த்தி! பொன் பெண் இரண்டையும் வென்ற தமக்கு என்ன குறை? தங்கள் வெற்றித் திறனைப் பரமனே சோதித் தறிந்தான்.

அப்பர்:—இனிப் பரமன் எம்மை ஆட்கொள்வான்.

[கோயில் மணி யடித்தல்]

இதோ வழிபாடு தொடங்கிற்று.

மைப்படிந்தகண்ணாளுந் தானுங் கச்சி
 மயானத்தான் வார்சடையான் என்னினல்லான்
ஒப்புடைய னல்லன் ஒருவனல்லன்
 ஒரூர னல்லன் ஓர் உவமனில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
 அவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
 இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே!

---

## காட்சி. உசு.

---

[திருப்புகலூர்ச் சந்நிதி]

அப்பர்:—பரமனே! இவ்வுடற் சட்டை தளர்ந்தது! உணர்வுட னுள்ள போதே உன்னைத் துதித்து அறிவுடன் நின் கழலடைகின்றேன்! என்னை ஆட்கொள்! சிவமும் தமிழுஞ் செழித்தோங்க நின் திருவருளாணை இதன் வாயிலாக வேண்டும் பணி புரிந்தது. இனி யிச்சட்டை மறைக! சிவ பெருமானே என்னை உன் திருவடியிற் சேர்த்துக் கொள்வாய்!

எண்ணுகேன் என்சொல்லி யெண்ணுகேனோ
 எம்பெருமான் திருவடியே யெண்ணி னல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைக ணில்லேன்
 கழலடியே கைதொழுது காணி னல்லால்

ஒண்ணுளே யொன்பது வாசல் வைத்தாய்
ஒக்க வடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே!

நமச்சிவாய நமச்சிவாய! சிவ சிவ சிவ சிவ!

[ஒரு சோதி தோன்றல் திருவுரு மறைதல்]

சிவநேசன்:—என்ன சோதி! மறைந்தார் அப்ப மூர்த்தி!

சிவபாதம்:—(பார்த்து) சிவபத மடைந்தார்! இப்போது தான், சிவன் கழலடையப் போவதாகச் சொன்னார். உடனே சிவன் அவரை ஆட் கொண்டான். சிவபெருமானே நினது பெயரையும் பெருமையையும் உலகிற் சிறக்கச்செய்து தமிழும் சமயமும் வாழவே வாழ்ந்த ஒரு மாப் பெரும் அடியாரை ஆட்கொண்டாய்! இப்படிப் பல அடியார்களை உலகில் நிலவச் செய். உருகும் அன்பர் ஒளியாய் மறைவர்! என் ஐயனே நின்போலச் சிவம் தமிழ் இரண்டிற்கும் அருட்பணி புரிந்தே எமது வாழ்வு திருவடி சேர்க!

வென்றுளே புலன்க ளைந்தார் மெய்யுணர் வுள்ளந் தோறும்
சென்றுளே அமுத மூற்றும் திருவருள் போற்றி யேற்றுக்
குன்றுளே யிருந்து காட்சி கொடுத்தருள் கோலம் போற்றி
மன்றுளே மாறி யாடும் மறைச் சிலம் படிகள் போற்றி!

அச்சமில்லை! யரனடிக் காட்பட்டோம்
இச்சகத்தில் எவர்க்குங் குடியல்லோம்!
மேச்சுமன்பினும் வெல்படைவேறில்லை
உச்சமா யுரைமின் சிவ நாமமே!

---



# THE YOGA OF SRI AUR

[A MONUMENTAL WORK ON YOGA.]

"This book is a clear and copious treatise on the Integral Yoga, comprising within its limits the theory and practice of all systems of yoga, the essence of the Gita, the Upanishads and the Tantric Works and essentially the nature and attainment of Divine Perfection and Supermanhood."

(*The Sunday Times*)

"The erudite author speaks from personal experience about the different systems of Yoga"

(*Hindustan Times*)

"The reader will find in this handy volume a practical description of all Indian systems of Yoga together with an inspiring account of the leading saints both of Northern and Southern India"

(*Amruta Bazzar.*)

"In this book the Integral Yoga has been explained. Its uniqueness brought out by a comprehensive study of other Yogas, Vedic and Tantric"

(*Forward.*)

***Price Rs. TWO only.***